புதிய

கோல்கேட் ஃப்ளோரிகார்ட் டூத்பேஸ்ட்









ஃப்ளோரிகார்டில் உள்ள எம்

**எஃப்பி ஃப்ளோரைட் எனாமலுடன் இணைந்து துவாரங்களுக்கும், சிதைவுக்கும் எதிராக உங்கள் பற்களை உறுதிப்படுத்துகிறது.**

தமிழ்நாடு, கேரள மாநிலங்களிலும், கர்நாடகத்தில் குறிப்பிட்ட சில மார்க்கெட்டுகளிலும் இப்போது கிடைக்கும்.

CFT.G.3 TM

# ஆட்டோ ஆர்ட்




ஒவ்வொரு ஆட்டோரிக்ஷா பின்புறமும் மக்களைக் கவரும் சித்திரங்கள் உள்ளன. அச் சித்திரங்களில் சிலவற்றையும் அவற்றுக்கான விளக்கங்களையும் இங்கு காண்கிறீர்கள். இந்த விளக்கங்களில் எவை கற்பனை? எவை மெய்யாலுமே ஆட்டோ ஓட்டிகள் கூறியவை? கண்டு பிடியுங்கள் பார்க்கலாம்! விடை 51ம் பக்கம்



"காளை மாடுகளைப் பார்த்ததும் எல்லா மனிதர்களுக்கும் வீரமும் வேகமும் வளர வேண்டும்."

"என்னைக் கவர்ந்த நேருஜியின் ஞாபகமாக ரோஜாப் படம் வரையச் செய்தேன்."





"பிள்ளையாரைப் பார்த்தாலே எல்லாக் கஷ்டமும் போயிடும். இன்னிவரைக்கும் என் வண்டியில் நோ டிரபிள்."

"பணம் எல்லோருக்கும் முக்கியம். தனலட்சுமியைப் பார்த்து நல்ல சகுனம் என்று கருதி ஏறிடுவாங்க."





"நம் நாட்டில் உழவர்களுக்குத்தான் மதிப்பு என்று அனைவரும் உணர்வதற்காக இந்தப் படத்தைத் தேர்ந்தெடுத்தேன்."

"சுறா மீன் மாதிரி எந்தத் தடங்கலையும் தாண்டி வேகமாகப் போகும் என் வண்டி!"





"மேரி மாதா என் வண்டியில் ஏறுபவர்களை நிச்சயம் ரட்சிப்பாள்."

"நான் சேர்ந்த கட்சிக்கு என்னாலான பிரசாரப் பணி இதுதான்!"





"நம் தேசிய மலரே தாமரை தானே!"



"கருடனை எனக்கு ரொம்பவும் பிடிக்கும். உலகையே ரட்சிப்பது மகா விஷ்ணுதான்கிற அர்த்தத்திலே அவர் வாகனத்தை என் வாகனத்தில் சித்திரமாக்கியிருக்கிறேன்!"



# ஆபட்ஸ்பரியில் ஓர் ஆஸ்பத்திரி



இந்தக் கீற்றுக்கொட்டகை சென்னை ஆபட்ஸ்பரியில் இருக்கிறது. இங்கே இலவச வைத்திய வசதி அளிக்கிறார்கள். சுமார் 500 நோயாளிகள் வருகிறார்கள்! கட்டடம் தயாராகி வருகிறது. பிறகு குடிசையிலிருந்து கட்டடத்துக்கு மாறிவிடும்.... ஞாயிற்றுக்கிழமை மட்டும் செயல்படும் இந்த ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற அதிகாலையிலிருந்தே வந்து பெயரைப் பதிவு செய்து சீட்டு பெறுகிறார்கள். கட்டுப்பாடும் நிலவும் அமைதியும் அதிசயம்!



"பிரார்த்தனையை உச்சரிக்கும் உதடுகளைவிட, உதவிகள் புரியும் கைகள் மேலானவை!" என்று சத்ய சாயி பாபா கூறியிருப்பதை வெறும் உபதேசமாக மட்டும் எடுத்துக்கொள்ளாமல், சத்யசாயி டிரஸ்ட் மூன்று வருடங்களுக்கு முன்னால் ஜீம்பாக்கத்தில் ஒரு டிஸ்பென்ஸரி ஆரம்பித்தார்கள். பிறகு தேனாம்பேட்டை ஆபட்ஸ்பரியில் ஒன்று. ஆறு மாதங்களுக்கு முன்னால் அண்ணா நகரில் துவங்கப்பட்டது ஒரு கிளை.

● மருத்துவ உதவி புரியும் டாக்டர்கள் குழுவில் தற்போது 40 பேர் இருக்கிறார்கள். நோயாளிகளுக்குத் தாம் கோரிக்கைகள் இருக்கும் என்பார்கள். இங்கே டாக்டர்களே கோரிக்கை விடுகிறார்கள்: தங்கள் சேவையைப் பயன்படுத்திக் கொள்ளும்படி! லேடி டாக்டர் ஒருவர், தமக்கு மாதம் இரண்டு ஞாயிற்றுக் கிழமைகளாவது இங்கே பணியாற்றச் சந்தர்ப்பம் தருமாறு கேட்டுக்கொண்டார். இதற்கு அடுத்த வாரம்: ஸ்டான்லியிலிருந்து ஓர் இளம் நியூரோ சர்ஜன், தலைமை டாக்டரை மெல்ல அணுகி, தமது பெயரையும், துறையையும் சொல்லி,





டாக்டர்கள் சிறிவிழாமல் கருணையுடன் கவனிக்கிருர்கள். அதுவே பாதி நோயைக் குணமாக்கினிடும் போலிருக்கிறது. ஒவ்வொரு ஞாயிறும் ஒவ்வொரு ஸ்பெஷலிஸ்ட் கவனிக்கிருர். எல்லா ஞாயிற்றுக்கிழமைகளிலும் கண் மருத்துவம் உண்டு.





பரிசோதனைச் சாலே. ரத்தம், மலம், சிறுநீர், கோழை - பரிசோதனை செய்யப்பட்டு, அவ்வப்போதே ரிசல்ட்டும் கையோடு தந்து விடுகிருர்கள். அலேச்சல் இல்லே. காத்திருத்தல் இல்லே.





நன்கொடையாக வருகிற மருந்துகள், டாக்டர்களுக்கு வரும் சாம்பிள்கள், எல்லாம் அடுக்குகிருர்கள். வீட்டில் மீந்து போன மருந்துகளை விளுக்க மனமில்லாதவர்கள், 'சாயி கிருபா'வில் கொடுத்து விடலாம்.





மருத்துச் சீட்டுக்கு இலவசமாக மருந்துகள் கொடுக்கும் பகுதி. வெளி நாட்டிலிருந்து அன்பர்கள் அனுப்பும் மருந்துகள் கூட வருகின்றன. ஆளுல் கஸ்டம்ஸில்தான் ரொம்ப கஷ்டம்ஸ்! ஏர் - இந்தியா உதவுவதாகத் தெரிவித்திருக்கிறதாம்.

தமது சேவையை அளிக்க விரும்புவதாய்த் தெரிவித்தார்!

● ஜாதி — மத வித்தியாசம் இன்றி நோயாளிகள் வருகிருர்கள். ஒரு முஸ்லிம் தாய், இங்கே குணமான தனது குழந்தைக்கு ஆசையுடன் இட்ட பெயர் சாயிராம்! வாரம் ஒரு முறை இங்கே இருக்கிற டாக்டர்களில் ஒருவர் ... சென்னையில் அன்னை தெரசாவின் கருணை இல்லத்துக்குப் போய் மருத்துவ உதவி அளிக்கிருர்கள்.

● ஸ்ட்ரெப்டோமைசின் ஊசி வேலே செய்யாத ஒரு டி. பி. நோயாளிக்கு ரிஃபாமைசின் மாத்திரைகள் உடனடியாகக் கொடுத்தாக வேண்டும். (ஒரு மாத்திரை விலே 3 ரூபாய்!) தற்சமயம் ஒரு மாதத்துக்குத் தேவையானதைக் கொடுத்து விட்டால் நிலேமையைச் சமாளித்து விடலாம். டாக்டர் 'மருந்து'கள் பகுதிக்குச் சென்று பார்க்கிருர். பெண்மணி அதிர்ஷ்டசாலி: சரியாக 90 மாத்திரைகள் அங்கே தயாராக இருக்கின்றன!

● சோலிங்கரிலிருந்து டெட்ரால் மாத்திரைகள் கேட்டு வருகிருர் ஓர் ஆஸ்துமாக்காரர். ''டெட்ரால், மருந்துக் கடைகளிலேயே கிடைக்குமே? ஏன் பஸ் சார்ஜ் செலவழித்து இங்கே வருகிறீர்கள்?'' என்று கேட்கிருர் டாக்டர் பரிவோடு. ''இங்கே தருகிற மாத்திரையைச் சாப்பிட்டால்தான் டாக்டர் குணம் தெரிகிறது!'' என்கிருர் ஆஸ்துமாக்காரர். நம்பிக்கை, நம்பிக்கை!

கட்டுரை: **சாருகேசி**
படங்கள்: **ரமணி**

# வட்ட மேஜை
# குண்டூசிக்கு ஒரு க்யூ!

● இந்த நாட்டில் அன்றாடத் தேவைகளுக்காகத் தினசரி வாழ்க்கையில் நாலு அல்லது ஐந்து மணி நேரம் க்யூவில் நிற்கும் மனிதர்களைப் பார்க்கும்போது, கொள்கைக்காக மக்களா அல்லது மக்களுக்காகக் கொள்கையா என்று புரியவில்லை. மக்களிடம் நிறையப் பணம் இருக்கிறது. (போலிஷ் கரன்ஸி) ஆனால் கடைகளில் பொருள்கள் இல்லை. ஆகவே எது கிடைத்தாலும் வாங்க மக்கள் தயாராக இருக்கிறார்கள். நீங்கள் நம்பமாட்டீர்கள், பதினைந்து நாட்களுக்கு முன்பு ஒரு கடையில் குண்டூசி வாங்க ஒரு பெரிய க்யூ! இன்றைக்குக் கிடைக்கிறது நாளைக்குக் கிடைக்காவிட்டால்?

கம்யூனிஸ ஆட்சியாளனும் இறையுணர்வை நீக்க முடியவில்லை. எட்டு வயதுப் பையன் தடுக்கி விழும்போது கூட மாதாவை அழைக்கிறான்!

வார்ஸா இந்திரா பார்த்தசாரதி

● அட்டைப் பெண்மணியின் பெயர் அஞ்சலி என்று தெரிகிறது. ஆனால், அவள் கையில் வைத்துள்ளது என்னவென்று தெரியவில்லை. நாயாயிருந்தால் அதன் முகம், கண் எதுவும் தெரியவில்லை. இப்படி இருந்தால் அது யாரைப் பார்த்துக் குரைக்....?

பெரம்பூர் அபிராமிதாசன்

● சும்மா சொல்லக்கூடாது சார். உப்புச் சப்பில்லாத விஷயத்தைப் பற்றி முதல் பக்கத்திலே நன்றாகவே ''கரடி விட்டிருக்கிறார்'' கட்டுரை ஆசிரியர்.

தக்கலை உ. சங்கரகப்பு

● மகாராஷ்டிர அமைச்சரவையில் நிதியமைச்சர் பொறுப்பு வகிக்கும் வைத்தியநாதன் சுப்பிரமணியம் பற்றிய கட்டுரை அருமை. அவரது சீரிய உழைப்பு, சமூகப் பணி இவைகளைப் பார்க்கும்போது இப்போது ஏற்றுக்கொண்ட பதவியிலும் தமிழகத்துக்குப் பெருமை சேர்ப்பார் என நிச்சயம் நம்பலாம். 'தமிழன் என்று சொல்லடா தலைநிமிர்ந்து நில்லடா' என்ற வரிகள் நினைவுக்கு வருகின்றன.

உடுமலைப்பேட்டை ஏ. சாகுல் அமீது

● நாட்டு மக்களிடம் நல்ல பெயர் வாங்க ராஜீவ் காந்தி நடத்திய நாடகம் முழு வெற்றி பெற்று விட்டது! அதுதான், கல்கி ஆசிரியர்கூட மயங்கிப் போய் மகிழ்ச்சித் தலையங்கம் தீட்டிவிட்டாரே!

(அஞ்சையா போய் ராஜீவ் காந்தியின் பரிபூரண ஆதரவாளர் முதல்வராகப் போகிறார் பாருங்கள்!)

கெங்கவல்லி கி. முருகவேள்

● ''சங்கிலிகள்'' சிறுகதை களங்கமில்லாத ஓர் அன்பை யதார்த்தமாக விளக்கும் வகையில் அமைந்தது நன்றாய் இருந்தது. எங்கே எல்லாரையும் போல் 'மீரா'—கண்ணனின்' உறவைக் கொச்சைப் படுத்திவிடுவாரோ என்றிருந்தேன். நல்லவேளை இல்லை.

விராலிமலை எஸ். நாகராஜன்

● ''வீரகேசரியின் சேனை'' அமர்க்களம். ஜே. எஸ். ராகவன் அழகாகக் கதையைக் கொண்டு சென்றுள்ளார். சரித்திரக் காலத்துக் கதை என்றவுடன் 'செல்லத்'திற்குத் தான் எவ்வளவு குஷி! புகுந்து விளையாடி விட்டார் மனுஷன்.

பெருங்களத்தூர் சி. கோடீஸ்வரன்

● சிவனாரைப் பெருமாளாக்கிவிட்டீர்களே! புரொபஸர் அர்ச்சகரைப் பற்றி எழுதிய அமரரின் பெயர் ராமேசன்: ரமேசன் அல்ல. ரமேசன் என்றால் திருமாமணாளன்; ராமேசன் என்பது திருவிராமேச்சரமுடையாராகிய ரர்மநாத ஸ்வாமியின் மற்றொரு பெயர்.

சென்னை-53 ரா. கணபதி

● 'தெரியுமா — ஆலயங்கள்' பகுதியில் 'யெஸ்பால்' என்பவரால் ''இடிவிழுந்து பிளவுண்ட நிலையில் இன்றும் இருக்கும் ராஜ கோபுரம்தென்காசி ஆலய ராஜ கோபுரம் என்று குறிப்பிடப் பட்டுள்ளது. அது தவறு. இடி விழுந்து பிளவுண்ட ராஜ கோபுரத்தை முழு கோபுரமாகக் கட்டுவதற்கு 1965—66ல் திரு பி. டி. ராஜன் தலைமையில்திருப்பணிக் குழு அமைத்து, அதை இடித்து முடித்ததுடன்திருப்பணிக் குழு செயலற்றதாகிவிட்டது. கிட்டத் தட்ட 15 ஆண்டுகளுக்குப்பின் இப்போது தற்போதைய சென்னை நகர ஷெரீப் திரு சிவந்தி ஆதித்தன் அவர்கள் தலைமையில் திருப்பணிக் குழு மீண்டும் செயல்படத் தொடங்கியுள்ளது.


சிவந்தி ஆதித்தன்

கொளத்தூர் ஆர். பாலகிருஷ்ணன்




வரப்பட்டார். அப்புறம்தான் தெரிந்தது அத்தனையும் நடிப்பு என்று. உசிலே மணி பிட்ச் அருகில் சென்று வந்தபோது இவர் அடித்த கமெண்ட்: ''ரோலர் உருட்டப்படு கிறது.''

இடையில் எல்லே மீறிய ஆவலோடு ரசிகர்களின் இடையூறு. போலீஸ் தடியடி— (இந்தக் கட்டுரையில் கிரிக்கெட், கிரிக்கெட் என்று எத்தனை முறை வந்திருக்கிறது? சரியாக எழுதுகிற அதிர்ஷ்டசாலி தனக்குத் தானே ஒரு பட்டுக் கைக்குட்டை பரிசாக வழங்கிக் கொள்ளலாம்!)

### டயலாக்

- 'ஹலோ' பாண்டியன், சீட்ல கர்சீப் போட்டு வைய்யி. அப்புறம் எடம் கிடைக்காது. விளையாட்டைச் சரியாப் பார்க்க முடியாது!'

# நட்சத்திர சந்தோஷங்கள்!

திருச்சி திடீரென்று கோடம் பாக்கம் ஆகிவிட்டது. வியாபார வர்த்தக் கழகத்தின் சார்பில் நடத்தப்பட்ட நட்சத்திரக் கிரிக்கெட், கலைவிழா இவற்றில் பங்கேற்க அத்தனை நட்சத்திரங்களும் வந்து குவிந்து விட்டனர்.



### விழாக் காலம்

(காலையில் ஆரம்பித்து மதியம் முடிந்த கிரிக்கெட் மேட்ச்)

- ஒரு மருமக்கு எத்தனை பேர்? கேட்காதீர்கள். மற்ற சட்ட திட்டங்கள்? அதைப் பற்றிக் கவலையில்லை. நட்சத்திரங்கள் கிரிக்கெட் விளையாண்டார்கள். சுரேஷும் பிரபுவும் (சிவாஜி யின்மகன்) இரண்டு கேப்டன்கள்.



பிரபு அணியின் ஓப்பனிங் பேட்ஸ் உமன் சுஹாசினி. அவருக்கு ஜோடி. ஒய். ஜி. மகேந்திரன். நன்றாக விளையாடிக் கொண்டிருந்த இந்த ஆசாமி திடீரென்று மயங்கி விழுந்தார். ஒரே பரபரப்பாகி விட்டது. ஸ்ட்ரெச்சர்வைத்துப் பெவிலியனுக்குத் தூக்கி



'அடேடே! நம்ப சாருஹாசன்தான் அம்பயர் போலிருக்கே!'

'என்னப்பா நம்ப நாகேஷ் சோகமான முகத்தோட இருக்கார்? உடம்பு ஏதும் சரியில்லையோ?'

'மஞ்சுளா குழந்தையைப் போட்டோ எடுத்துக்கிட்டியா?'

'இல்லேப்பா! போட்டோ எடுத்தாக் குழந்தைக்கு உடம்பு சரியில்லாமப் போயிடுதாம். பர்மிஷன் தரலே!'

'நான் ஐந்நூறு ரூபா கொடுத்து டிக்கட் வாங்கியிருக்கேன். சரியான அக்காமடேஷன் இல்லே சார். குடும்பத்தோட வந்து தொலேச்சாச்சு. போலீஸ் தொல்லே தாங்கலே!'

'வியாபார வர்த்தகக் கழகத் தலைவர் ஞானராஜ் எங்கிருந்தாலும் மேடைக்கு வரவும்.'

'புள்ளைங்களா சூட்கேஸ் மத்த சாமான் களை வண்டியில ஏத்திட்டீங்களா? அப்புறம் கடைசி நேரத்திலே தேடாதீங்க.'

'டேய்! அங்கே பேசிட்டு இருக்கிறது சிவாஜிடா!'

## நட்சத்திரங்கள் வெட்டுகிறார்கள்

● சினிமா கிரிக்கெட் வீரர்களுக்கு உணவு அளித்த ஆஸ்பி ஹோட்டல் மானேஜர் பாலன், நட்சத்திரங்களின் உணவு பழக்கம் பற்றி விசாரிக்கையில்,

சிவாஜி காலையில் விரும்பிச் சாப்பிட்டது இட்லி, ரவா தோசை. சாப்பிடும்போது இடது கையில் எப்போதும் கர்சீப் இருக்கும். அடிக்கடி வாயை ஒற்றிக் கொண்டு சாப்பிடுவது இவரது மானரிஸம்.

அன்றைய மெனு மட்டன் பிரியாணி, பாய்ல்ட் எக், பகளாபாத், ஸ்டோன் லெஸ் ரைஸ் இன்னும் பிற.

(அது என்ன ஸ்டோன் லெஸ் ரைஸ்? 'கல் இல்லாத அரிசி'யாம்!)




ரஜினி விரும்பிச் சாப்பிட்டது மட்டன் பிரியாணி.

விஜயகுமார் அன்றைய மெனுவில் இடம்பெறாத ஆம்லெட் ஆர்டர் செய்துகாத்திருந்து சாப்பிட்டாராம்.

மனோகருக்குப்பசி தாங்காது என்று சிவாஜி சொன்னதாய் இவர் சொல்கிறார்.

முதல் பந்தியில் சாப்பிட உட்கார்ந்து, கடைசி பந்திவரை நிதானமாய் அமர்ந்து சாப்பிட்ட மனிதர் நாகேஷ் — இவர் சாப்பிட எடுத்துக் கொண்டது இரண்டு மணி நேரம்.

ஸ்ரீகாந்த் சைவ உணவு எடுத்துக்கொண்டவர்களில் ஒருவர். அது சரி, சுஹாசினி?

மூச்!

—மீஸ் சுஜாதா

புகைப்படங்கள்: நிருபமா சந்திரன்

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆




1. கேள்விகளை நீங்கள் கேட்கும்போது அவை குழந்தைத்தனமாக இருக்க வேண்டும். தெரிந்த விஷயங்களையும் தெரியாதது மாதிரிக் கேட்க வேண்டும். உதாரணமாக பேனாவுக்கு இங்க் போடுவது பற்றி விளக்கமாகச் சொல்ல ஒருவர் வந்திருக்கிறார், அவரைக் கேள்வி கேட்க வேண்டும் என்றால், ''சார் இதுதான் பேனாவா? இது என்ன நிப்பா?, பேனாவாலே பேப்பர்லேதானே எழுதணும், தரையில் எழுதக் கூடாதுதானே?'' என்கிற பாணியில் கேள்விகளைக் கேட்க வேண்டும். பார்ப்பவர்கள் இதனால் மெய்சிலிர்த்துப் போவார்கள். பேட்டியும் சிறப்பாக அமையும்.

2. வெறும் கேள்வி மட்டும் உங்களுக்குத் தெரிந்தால் போதாது. அதற்கான பதிலும் தெரிந்திருக்க வேண்டும். கேள்வியைக் கேட்டு விட்டு எதிரிலிருப்பவர் பதில் சொல்லுமுன், சத்தமாக அவர் குரலுக்கு மேல் பதிலையும், நீங்களே சொல்லிவிட வேண்டும். அவர் எத்தனையோ முயன்றும், பதில் சொல்ல முடியாமல் பேசாமல் அடங்கி விடுவார். சட்டென்று அடுத்த கேள்விக்கு நீங்கள் சென்றுவிடலாம். உதாரணமாக ஒரு தொழிலதிபரைப் பேட்டி காண்கையில் ''இந்தத் தொழிலுக்கான மூலப்பொருள் எங்கிருந்து கிடைக்குது?'' என்று கேட்டுவிட்டு, ''அதாவது வெளிநாடுகளிலேருந்து கிடைக்குதுன்னு சொல்ல வர்றீங்க இல்லையா?'' என்று நீங்களே முடித்துவிட வேண்டும்.

3. பேட்டி முடிய ஒருசில நிமிஷங்கள் இருக்கும். நீங்கள் ஏதோ கேள்வி கேட்டு எதிரிலிருப்பவர் மும்முரமாகப் பதில் சொல்லிக்கொண்டிருப்பார். கொஞ்ச நேரம்தான் பாக்கி இருக்கிறது என்பதைக் காமிரா அருகிலிருந்து உங்களுக்கு யாரேனும் உணர்த்துவார்கள். உடனே பதில் சொல்பவரை 'அம்போ' என்று விட்டு விட்டு காமிரா பக்கம் திரும்பி, ''இதோ முடிச்சுடறேன் ஆயிடுத்து, முடிஞ்சு போச்சு'' என்கிற பாணியில் தலையை ஆட்டிக் கொள்ள வேண்டும். இது பார்ப்பதற்கு ரம்மியமாக இருக்கும்.

4. நேரம் கிடைக்கும்போதெல்லாம் அடிக்கடி புன்னகை புரிய மறக்கக் கூடாது. அது அசட்டுப் புன்னகையாகவோ அசந்தர்ப்பப் புன்னகையாகவோ இருந்தால்கூடப் பாதகமில்லை. புன்சிரிப்பு ரொம்ப முக்கியம். அதிலும் வருமான வரி அதிகாரிகள், ரயில்வே அதிகாரிகள், போலீஸ் அதிகாரிகள் பேட்டி காணும்போது பார்வையாளருக்கு ஏற்படும் மனக் கசப்பை நீக்கி அவர்களைச் சிரிக்க வைப்பது இந்தப் புன்னகைதான் என்பதை மறந்து விடவே கூடாது.

—பாபு

# வீட்டில் அனைவரின் கேசப் பராமரிப்புதானே? அதற்கு நம்பகமானது, விசேட ஃபேமிலி ஷாம்பூ பாமோலிவ்.



பாமோலிவ் ஷாம்பூ:
ரெகுலர், அல்லது
கூடுதலான
போஷாக்கிற்கு எக்




பாமோலிவ், எல்லா வகைக் கேசத்திற்கும் ஏற்ப விசேட முறையில் தயாரிக்கப்பட்டுள்ளது. அது, வளமையான நவீன ஷாம்பூ. உங்கள் கேசத்தை நன்கு தூய்மை துலங்க வைக்கிறது. குழந்தைகளின் மென்மையான கேசத்திற்கோ மிகவும் ஏற்றது.

அது மட்டுமா? இவ்வகை ஷாம்பூக்களிலே சிக்கனமானது. பாமோலிவ் ஷாம்பூ—குடும்ப பட்ஜெட்டிற்கும் ஏற்றது.

**குடும்பத்தினர் கேசப் பராமரிப்புக்கு நேசமானது-உங்கள் பட்ஜெட்டிற்கும் ஏற்றது**

GK6E.PS.7 TM


சூ! சூ!
பத்திரிகைகள் மீது தாக்குதல்


நீதி விசாரணை
சிமெண்ட்


சட்ட மன்றத்தில் ஏழு மணி நேரப் பதிலுரை



கல்கி
1982 பிப்ரவரி 28
துன்மதி மாசி 16
மலர் : 40 இதழ் : 31
தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

''நமது தேசியப் பத்திரிகைகள் சுதந்திரமாக இயங்கவில்லை; எதிர்க் கட்சியாகவே செயல்படுகின்றன; எப்போது பார்த்தாலும் குறை கூறி எழுதுவதும் குடிமுழுகிப் போய்விட்டது போலவே செய்திகளை வெளியிடுவதும் பெருங்குற்றம்; நாங்கள் எங்கள் தவறுகளை மறைக்க முயலவில்லை, ஆனால் பத்திரிகைகள் விஷயங் களைச் சரியானபடி சித்திரிக்க வேண்டும்.'' — இந்திராகாந்தி

இதோ பிரதமரின் மனம் குளிரும்படியான ஒரு

# "சரியான சித்திரம்!"

**மா**நில அரசுப்பணிகளுக்கு என மத்திய அரசினால் ஒதுக்கப் பட்ட பத்தாயிரம் டன் சிமெண்டிலிருந்து நாலாயிரம் டன் சிமெண்டைப் பலமாடி குடியிருப்புக்களைக் கட்டும் தனியார்நிறுவனங் களுக்குத் திசை திருப்பிவிட்டார் குண்டுராவ் என்பது பொதுக்கணக் குத் தணிக்கைக்குழுவின் குற்றச்சாட்டு. பயங்கரமான குற்றமாகத் தோன்றினாலும் குண்டுராவ் இதற்காக லஞ்சம் வாங்கினார் என்ப தாக நிரூபிக்கப்படவில்லை என்பதைக் கவனிக்க வேண்டும். அந்துலே செய்ததுபோல் ஓர் அறக்கட்டளைக்குப் பணம் சேர்ப்பதில் தவறில்லை என ராஜீவ் காந்தியே எடுத்துக் காட்டியிருக்கிறார் என்றாலும் குண்டு ராவ் அதைக்கூடச் செய்ததாகக் கருத ஆதாரமில்லை. 'தேர்தல் சமயத்தில் கவனித்துக் கொள்ளுங்கள்' என்றோ அல்லது 'என் உற வினர்களுக்கு நாலு, 'த்ரீ பெட்ரூம் ஃப்ளாட்'டுகளை ஒதுக்கி விடுங்கள்' என்றோ குண்டுராவ் சொன்னதாக நாம் கேள்விப் படவுமில்லை. எனவே எதற்காக இதைப் பெரிது படுத்தவேண்டும்?

மேலும் இப்படி நாலாயிரம் டன் சிமெண்டைப் பல மாடி குடியிருப்புக்கள் கட்டத் தாம் திசை திருப்பி விட்டதுபற்றி மத்திய அரசுக்கு அவரே கடிதம் எழுதிவிட்டார் என்பதும் அதற்கு மத்திய அரசு 'கூடாது' என்று பதில் எழுதவில்லை என்பதும் கவனத்துக் குரியது. அந்தக் கடிதம் மத்திய அரசுக்குப் போய்ச் சேராமலோ அல்லது கவனிக்கப் படாமலோ இருந்தால் அது தபால்துறை அல்லது சிவப்பு நாடாவின் தவறேயன்றி, குண்டுராவின் குற்றமல்ல.

நாலாயிரம்டன் சிமெண்ட் திசை திருப்பப்பட்டதால் அரசுப் பணிகள் பல தாமதமாகி அதனால் பொதுமக்கள் பாதிப்புக்கு உள் ளாகலாம் என்பது உண்மையேயாயினும் இதே நேரத்தில் 'தனியார் துறைக்கு ஊக்கமளிக்கப்படுவதில்லை' என்ற குற்றச்சாட்டு குண்டு ராவின் இச் செய்கையால் வலுவிழந்து போகிறது என்பதும் மாநிலத் தலைநகரில் மக்களுக்குக் குடியிருப்பு வசதி அதிகரிக்க அவர் உதவி யிருக்கிறார் என்பதும், பலமாடி கட்டிடங்களை எழுப்பி ஃப்ளாட்டு களை விற்கும் முதலாளிகள் பெரும் லாபமடைந்தாலும் அதிலிருந்து அரசுக்கு வரி செலுத்தப்படுகிறது என்பதும், கட்டுமானப் பணியில் ஈடுபட்டிருந்த தொழிலாளர்களுக்கு நாள் கூலி தப்பாமல் கிட்ட குண்டுராவ் வசதி செய்திருக்கிறார் என்பதும் மறுக்கப்படக் கூடுமா?

அடுக்குமாடி கட்டிட முதலாளிகளுக்குத்தான் குண்டுராவ் உதவினாரேயன்றி வீடுகட்டிக்கொள்ள விழையும் தனி நபர்களுக்கான ஒதுக்கீட்டை ஆண்டுக்கு ஆண்டு குறைத்து வந்திருக்கிறார் என்பதும் அதனால் பல தொழிலாளிகள் நாட் கூலி இழந்து தவித்தனர் என் பதும் அப்படி யென்ன பெரிய விஷயமா?

எனவே பொது கணக்குத் தணிக்கைக் குழு எடுத்துக்காட்டிய ஒரு தவறு நிகழவில்லை என்று மறைக்கவேண்டிய அவசியமில்லை என்றா லும் அக்குழு தன் கடமையைச் செய்ததை வரவேற்கவே செய்யலாம் என்றாலும் குண்டுராவ் செய்த காரியத்தால் ஒன்றும் குடிமுழுகிப் போய் விடவில்லை, கர்நாடகாவுக்கு ஒதுக்கப்பட்ட சிமெண்ட் கர் நாடகாவிலேயேதான் பயனாகியிருக்கிறது என்பதைச் சிந்திக்கவும்.



இவ்வளவையும் மீறி நாளை குண்டுராவ் மீது அதிருப்தி ஏற் பட்டு அவரைப் பிரதமர் பதவி இறக்கம் செய்ய விரும்பினால் அதிலும் நியாயம் இல்லாமல் போகாது என்றும் பிரதமரின் இருபது அம்சத் திட்டத்தை அமல்படுத்தி நாடு முன்னேறப் பாடுபடுவோம் என்றும் கூறி முடிக்கிறோம். வாழ்க இந்திரா! வளர்க ராஜீவ்!

## தமிழகத்தின் தங்கமகன்

கிரிக்கெட்டில் ஒப்பனிங் பாட்ஸ்மன்களின் பணி மிகவும் கஷ்டமானது. பந்து புத்தம் புதிதாய்ப் பளபளக்கும்போது ஸ்விங் இருக்கும். வேகப் பந்து வீச்சாளருக்குப் பெரிதும் உதவும். அதை ஆடுவதற்குப் பிரத்தியேகக் கலை நுணுக்கமும் ஆழ்ந்த கவனமும் தேவை. பொறுமையாக, நீண்ட நேரம் ஆடி, படிப்படியாக ரன்களை உயர்த்தி, பலமான அஸ்திவாரம் அமைப்பதுடன், பந்தினுடைய பளபளப்பைக் குறைத்து மிடில் ஆர்டர் பாட்ஸ்மன்களுக்கு வசதி செய்து தர வேண்டும். இதற்கெல்லாம் உடலுறுதியும் மன உறுதியும் தேவை.

இந்தக் குண நலன்கள் அனைத்தையும் பெற்றுத் தமிழக ஒப்பனிங் பாட்ஸ்மன்களுள் தலைசிறந்த ஒருவராக விளங்கும் சிவராம கிருஷ்ணனின் இல்லத்துக்குள் நுழைந்தால் முதலில் நம் கவனத்தைக் கவர்வது பெரிய அகலமான கண்ணாடி அலமாரி நிறைய, அடுக்க இடமின்றித் திணிக்கப்பட்டுள்ள கேடயங்கள், கோப்பைகள்.

கம்பீரத் தோற்றமும், மாறாத புன்னகையுமாக நம்மை வரவேற்கும் சிவராம கிருஷ்ணனுக்குக் கிரிக்கெட்டில் எப்போது ஈடுபாடு ஏற்பட்டது?

''அதைக் குறிப்பிட்டுச் சொல்வது ரொம்பக் கஷ்டம்'' என்கிறார் அவர். ''எங்கள் குடும்பமே கிரிக்கெட் குடும்பம்தான். ரஞ்சி டிராஃபி மாட்ச் முதன் முதலாக ஆடப்பட்ட வருஷத்தில் என் தகப்பனாரின் மாமா பி.எஸ். ராமச்சந்திரன் மைசூருக்கு எதிராகச் சென்னை அணியில் ஆடியிருக்கிறார். என் அப்பா பி.என். வேங்கடராமனும் அந்நாளில் நல்ல கிரிக்கெட் ஆட்டக்காரர்தான். என். பெரியப்பா பி. என். சுந்தரேசனும் அப்படியே. தவிர அவர் மிகப் பிரபலமான கிரிக்கெட் விமர்சகரும் கூட. கிரிக்கெட் சூழ்நிலையிலேயே நான் பிறந்து வளர்ந்ததால் எப்போது ஆட ஆரம்பித்தேன் என்று எனக்கே தெரியாது. யாரும் தூண்டிவிட அவசியமின்றி கிரிக்கெட் ஆர்வம் இயல்பாகவே என்னிடம் குடிகொண்டிருந்தது. ஆனால் மயிலாப்பூர் ரிக்ரியேஷன் கிளப் காப்டன் பி. ஆர். சுந்தரம் எனது பள்ளி மாணவப் பருவத்திலேயே எனக்குக் கொடுத்த ஊக்கமும் உற்சாகமும் நான் முன்னுக்கு வரப்பெரிதும் உதவியிருக்கிறது.''

நன்றியோடு நினைத்துப் பார்க்கும் சிவராமகிருஷ்ணனின் கவர்ச்சிகரமான கண்களில் மகிழ்ச்சி பாவமும் போட்டியிட்டுத் தோன்றுமாறு ஒரு கேள்வியைப் போடுகிறோம்:

''கிரிக்கெட் காரணமாகப் படிப்புக்கு இடையூறு ஏற்பட்டதுண்டா?''

''குடும்பத்தில் யாருமே என்னை ஏன் கிரிக்கெட் ஆடுகிறாய் என்று கேட்டதில்லை. கவலைக்குரிய விதத்தில் ஒரு சப்ஜெக்டில் மார்க் குறையுமானால், 'ஜாக்கிரதையா இருடா. கொஞ்சம் பிராக்டிஸை வேணும்னா குறைச்சுக்கோயேன்' என்று அப்பா சொல்வார். அதுவும் அரைமனதாகத்தான்! நானும் கிரிக்கெட் காரணமாகப் பிரமோஷன் தடைப்பட அனுமதிப்பதில்லை.''

பதினைன்காம் வயதிலேயே முக்கியமான கிரிக்கெட் மாட்சுகளில் கலந்துகொள்ள ஆரம்பித்துவிட்ட சிவராம கிருஷ்ணன் 1971ல் சென்னை பல்கலைக்கழகம் நீண்டகாலத்துக்குப் பிறகு ரோஹின்டன் பேரியா டிராஃபியைத் திரும்பப்பெறுவதில் முக்கிய பங்கு வகித்தார். பம்பாய்க்கு எதிரான இந்த மாட்சில் சதம் கண்டு தமது பிரகாசமான எதிர்காலத்துக்கு வழி வகுத்துக் கொண்டார்.

அடுத்த ஆண்டே மதுரை—சென்னை பல்கலைக் கழகங்களிடையே நடந்த மாட்சில் 213 ரன்களை எடுத்து ரெகார்ட் ஏற்படுத்தினார். பல்கலைக் கழக அளவில் இன்றுவரை யாராலும் முறியடிக்கப்படாத சாதனையாகவே இது விளங்குகிறது. விவேகானந்தா கல்லூரியின் சிறந்த கிரிக்கெட் ஆட்டக்காரர்விருதையும் பெற்றார்.

கல்லூரிப் படிப்பு முடிந்த பின்னரும் கிரிக்கெட் உலகில் சாதனை தொடர வேண்டும் என்று விரும்பிய இவருக்கு நல்லாதரவு தர முன்வந்தது டி. வி. எஸ். என்ற மூன் றெழுத்து. லூகாஸ்—டி. வி. எஸ். ஸில் விற்பனை அதிகாரியாகச் சேர்ந்த இவருக்கு அந்த நிறுவன நிர்வாகிகளும் சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் தலைவர் திரு ரத்தினமும் மிகுந்த உற்சாகமளித்து வருகிறார்கள்.

73—74ல் ரஞ்சி டிராஃபி மாட்சில் முதன் முதலாகப் பங்கேற்கும்வாய்ப்பு பெற்ற இவர் 1976ல் பிரசன்னா, சந்திரசேகருக்கு எதிராக 169 ரன்கள் எடுத்ததை ''என் வாழ்நாளில் மறக்க முடியாத சம்பவம்'' என்கிறார். அதே ஆண்டு மாநிலத்தின் சிறந்த கிரிக்கெட் வீரர் என்ற விருதும் கிடைத்தது. 1980-81ல் ரஞ்சி டிராஃபி மாட்சுகளில் 630 ரன்களைக் குவித்தார். ஹிந்து பத்திரிகை நிறுவனம் தயாரிக்கும் இண்டியன் கிரிக்கெட் ஆண்டுமலர், ஒவ்வொரு ஆண்டும் இந்தியாவில் விளையாடிய கிரிக்கெட் வீரர்களுள் (அயல் நாட்டவர் உள்பட) தலை

சிறந்த நால்வரைத் தேர்ந்தெடுக்கிறது. சென்ற ஆண்டு இந்த நால்வரில் ஒருவராக விளங்கினார் சிவராமகிருஷ்ணன்! இந்த ஆண்டிலோ, தமிழக விளையாட்டு விமர்சகர்கள் வழங்கும் எஸ்.கே. குருநாதன் கோப்பையைப் பெற்றுள்ளார். இது, மாநிலத்தின் தலைசிறந்த ஒரே ஒரு விளையாட்டு வீரருக்கு ஆண்டுதோறும் வழங்கப்படுகிறது. கிரிக்கெட்டைப் பொறுத்த மட்டில் 1969ல் வெங்கட் இக் கோப்பையைப் பெற்ற பிறகு பன்னிரண்டு ஆண்டுகளுக்குப் பின் இப்போது தமிழகத்தின் தலைமகனாக விளங்கும் பெருமை சிவராமகிருஷ்ணனை வந்தடைந்திருக்கிறது.

இவர் குடும்பத்தில் முன்னோடிகளாகப் பலர் மாநில அளவில் கிரிக்கெட் ஆடும் தகுதி பெற்றிருந்தனர். இன்றைக்கும் கூட இவரது மூத்த சகோதரர் ராம்நாராயணன் ரஞ்சி டிராஃபி மாட்ச்களில் பங்கேற்றுச் சிறந்த ஆஃப் ஸ்பின் போலர் என அகிலத்திந்தியப் புகழ் பெற்றுள்ளார்.

மனைவியும் கிரிக்கெட் ஆட்டக்காரராகவே அமைந்தது சிவராமகிருஷ்ணனின் அதிர்ஷ்டமா அல்லது தொல்லையா?

''அதிர்ஷ்டம்தான்'' என்று உடனே பதிலளிக்கும் சிவராமகிருஷ்ணன், ''ஹஸ்தா பக்கத்தில் இருப்பதால் இப்படிச் சொல்லவில்லை! எனது ஆட்டத்தை நுணுகி நோக்கி விமர்சிக்கும் தகுதி பெற்றவள் இவள். அது வசதிதானே?'' என்கிறார்.

ஹஸ்தா கல்லூரி நாட்களில் கிரிக்கெட் ஆடிக் கல்லூரிப் போட்டிகளில் கலந்து கொண்டிருக்கிறார். ''சிவராமகிருஷ்ணனையா சிவராமகிருஷ்ணனின் ஆட்டத் திறனையா எதை முதலில் ரசிக்க ஆரம்பித்தீர்கள்?'' என்று கேட்டால் முகம் சிவக்க, ''இரண்டையும்தான்'' என்று கூறிச் சமாளிக்கிறார். காதல் திருமணம் புரிந்து கொண்ட இந்த அழகிய தம்பதிக்கு இன்று அழகான இரண்டு குழந்தைகள். பெரியவன் நிகிலுக்கு மூன்று வயது. வித்யுத் இரண்டரை மாதக் கைக்குழந்தை.

சில சமயம் குறைந்த எண்ணிக்கைக்கு அவுட் ஆவதும் சகா செய்த தவறு காரணமாய் ரன் அவுட் ஆவதும் எல்லாக் கிரிக்கெட் ஆட்டக்காரர்களுக்கும் ஏற்படும் துரதிர்ஷ்டம்தான்.. சிவராமகிருஷ்ணனும் விதிவிலக்கல்ல. ஆனால் இதுவரை ரஞ்சி டிராஃபி மாட்ச்களில் 2400 ரன்கள் — சராசரியில் ஓர் இன்னிங்ஸுக்கு 40 ரன்கள் — எடுத்திருக்கிறார் என்பதைக் கவனிக்கையில் ''ஒரு காப்டனின் நம்பிக்கைக்குரிய ஆட்டக்காரர்'' என்று இவரைஎன். எஸ். ராமசுவாமி இந்தியன் கிரிக்கெட் ஆண்டுமலரில் வர்ணித்திருப்பதன் பொருத்தம் புரியும்.

எப்போதாவது மிடில் ஆர்டர் பாட்ஸ்மனாக அனுப்பப்பட்டால் அதற்கேற்பத் தமது ஆட்ட நுணுக்கத்தை மாற்றிக்கொள்ளத் தயங்காத சிவராமகிருஷ்ணன், சமீப காலமாகப் பிரபலமடைந்து வரும் ஒரு நாள் கிரிக்கெட் போட்டிகளுக்கும் அனுசரணையாக ஆடும் திறன் பெற்றிருக்கிறார். இந்த மாட்சுகளில் ஆர அமர ஆட முடியாது. ரன்களைத் துரித கதியில் குவிக்க வேண்டும். சிவராமகிருஷ்ணன் சிரமமான காட்சுகளையும் தவறவிடாத சிறந்த குளோஸ் இன் ஃபீல்டர் என்பது மற்றுமொரு பிளஸ் பாயிண்ட்.

இத்தனை சிறப்புக்களை உடைய இவருக்குக் கிடைக்க வேண்டிய அளவுக்கு, கிடைக்க வேண்டிய நிலைகளில் சந்தர்ப்பங்கள் கிடைக்கவில்லை என்பது தமிழகக் கிரிக்கெட்டின் துரதிர்ஷ்டம்; கிரிக்கெட்டிலும் கூடப் புகுந்துவிட்ட அரசியலுக்கும் ஊழலுக்கும் வெற்றி என்பது தவிர நாம் வேறு என்ன கூற முடியும்?

பேட்டி: மஞ்சுளா ரமேஷ்; குட்டிகிருஷ்ணன்

மேலட்டையில் சிவராமகிருஷ்ணன் தம்பதி மகன் நிகிலுடன். வண்ணப்படம்: உத்ரா





7

பல்லவ மாதண்ட நாயகர் பாராசிரயன் முகத்தைப் பார்த்தால் உடனே கழுகு நினைவு வரும்! மேலே வட்டமிட்டபடியே, 'எங்கே இரை கிடைக்கும்? ஜிவ்வென்று இறங்கிக் கொத்தலாம்' என்று சதா உன்னிப்பாய் நோட்டமிடும் கழுகு போல இவரும், 'எங்கே என்ன சதி நடக்கும்? சரேலெனப் பாய்ந்து பிடிக்கலாம்' என்று ஆசையோடும் சந்தேகத்தோடும் சுற்று முற்றும் நோக்கும் கொடூரக் கண்களை உடையவராய் இருந்தார். உயர்ந்த கழுத்தும் கூரிய மூக்கும் கழுகுத் தோற்றத்தை உறுதிப்படுத்தின. வற்றலான உடலில் இலேசாக வயிறு பருக்க ஆரம்பித்திருந்ததை ஒப்புக்கொள்ள விரும்பாதவராக இடையில் ஆடையை இறுக்கியும் நெஞ்சைச் சற்றுச் சிரமப்பட்டு சதா முன் தள்ளியும் மறைக்க முயன்று கொண்டிருந்தார். அவர் கரத்தில் வெள்ளிக் கங்கணங்கள் அசைந்து ஒலி எழுப்பின. காதுகளில் குண்டலங்கள் ஜொலித்தன. நெஞ்சை மறைத்த பீதாம்பரம் தாம் அணிந்துள்ள ஆபரணத்தை மறைத்துவிடக் கூடாது என்று கருதுகிறவர் போல அதை

# ரவிகுல திலகன்

## செம்பியன்

வெண் பட்டுக்கு மேலே வெளியே தெரிகிற மாதிரி தொங்க விட்டிருந்தார். அந்த ஆபரணம் அவர் அதிகாரத்தை உறுதிப்படுத்தும் ஒன்று. பல்லவ சக்கரவர்த்தியின் சிம்ம இலச்சினையுடன் கூடிய வேலைப்பாடு மிக்க தங்கப் பதக்கம், கனமான பொன் சரட்டில் தொங்கி அசைந்தது. அதை அணிவதிலே அவர் கொண்டிருந்த பெருமிதத்தை உயர்ந்திருந்த அவர் தோள்கள் பறைசாற்றின. இடையில் அவர் செருகியிருந்த குத்தீட்டியின் மேலுறையில் நவரத்தினங்கள் பதிக்கப்பட்டிருந்தன. அதன் கைப்பிடியின் உச்சியில் சின்னதாக ஒரு சிம்மம் அமர்ந்தவாக்கில் மௌனமாய்க் கர்ஜித்துக் கொண்டிருந்தது.

அவரைக் கண்டதும் ஏற்பட்ட திகைப்பை மன்னரும் மைந்தரும் சீக்கிரமே உதறினர். பரபரப்புடன் தமது ஆசனத்திலிருந்து எழுந்த குமாராங்குசன், ''வரவேண்டும், வரவேண்டும்'' என்று வரவேற்று விட்டு, ''ஏது இந்த அகால நேரத்தில்....?'' என்று வினவினார்.

''அகாலத்தில்தானே அந்தரங்கங்கள் பேசப்படுகின்றன!'' என்றார் பாராசிரயன், தந்தையையும் மகனையும் மாறி மாறிப் பார்த்து. குத்தல் ஆழத் தைத்ததா என்று கவனித்தபிறகு நிதானமாக ஏதோ ஹாஸ்யமாகத் தாம் பேசிவிட்டது போல் பெரிதாய்ச் சிரித்தார்.

விஜயாலயன் நற நறவெனப் பற்களைக் கடித்ததானது, நல்லவேளை அந்த நகைப் பொலியில் அடங்கிப் போயிற்று.

குமாராங்குசன் தாம் அவரது நகைச் சுவையை ரசித்தது போல் நடித்துச் சிரித்து விட்டு, ''தாங்களே சற்று முன் கூறியது போல், பல்லவ சக்கரவர்த்திக்குத் தெரியவராத ரகசியம் என்ன இருக்க முடியும்?'' என்றார்.

''அப்படிச் சொல்லுங்கள்!'' என்ற பாராசிரயன் அங்கே அனைவருக்கும்



ஆசனங்கள் உள்ளனவா என்றுகூடப் பார்க்காமல் மன்னர் அதுவரை அமர்ந்திருந்த இருக்கையில் உபசரிக்கப்படாமலேயே உட்கார்ந்து கொண்டார். ஆகவமல்லன் இதைக் கண்டு அவசரமாக ஓடிப்போய் மேலும் இரு இருக்கைகளைப் பணியாட்கள் சுமந்து வரச் செய்தான். அந்தச் சில கணங்களேனும் தாம் அமர்ந்திருக்க மன்னரும் இளவலும் நிற்க நேர்ந்ததில் திருப்தியுற்றவராக மார்பில் தொங்கிய சிம்ம இலச்சினையை வலது கரத்தில் எடுத்து இடது உள்ளங் கையில் தட்டியவாறே ''பல்லவ சக்கரவர்த்தியின் கண்களாகவும் காதுகளாகவும் இங்கே இயங்க வேண்டியவன் நான்தானே'' என்றார் பராசிரயன். ஆமோதிப்பை அவர்களிடமிருந்து எதிர்பார்ப்பவராக இருவரையும் மாறி மாறிக் கழுத்தின் சிறு சிறு நொடிப்புகளுடன் கூர்ந்து நோக்கினார். அப்போது கழுகாகவே அவர் மாறிவிட்டது போல் தோன்றியது.

''பல்லவேந்திரரின் கண்களாகவும் காதுகளாகவும் மட்டும் இருந்தால் போதுமா? அவரது உள்ளத்தையும் அல்லவா நீங்கள் பிரதிபலிக்க வேண்டும்'' என்றான், விஜயாலயன், தந்தையைத் தொடர்ந்து தானும் ஓர் இருக்கையில் அமர்ந்தபடியே.

''ஆகா! பல்லவ சக்கரவர்த்தியின் உள்ளத்தில் என்ன இருக்கிறது என்று யாருக்குத்



தெரியும்? அந்த சர்வேசரனுக்குக் கூடத் தெரியாது!'' என்றார் பாராசிரயர். ''இப்போது கூடப் பாருங்கள்! எனக்கு ஒரு விசித்திரமான ஆணை பிறந்திருக்கிறது!'' என்று கூறி நிறுத்தியவர், ''அது என்ன?'' என்று அவர்கள் ஆவல் மிகுதியால் கேட்டுவிடுவார்கள் என்று எதிர்பார்ப்பவர் போல் அவ்விருவரையும் மறுபடியும் கழுத்தின் நொடிப்புடன் கழுகுப்பார்வையால் அளந்தார். அந்தக் கேள்வியை எழுப்ப வேண்டியதுதான், உடனே, ''அதை எப்படி நான் வெளியிட முடியும்? அது ரகசிய ஆணை அல்லவா?'' என்று கேட்டுப் பரிகாசமாகச் சிரிப்பார் பாராசிரயன் என்பதை நன்கு உணர்ந்திருந்த தந்தையும் மகனும் அவருக்கு அந்த வாய்ப்பைத் தந்துவிடாமல் வாளாவிருக்கவே, மாதண்டநாயகர் பெரும் ஏமாற்றமடைந்தவராக, ''ஆனால் அதைப் பற்றிப் பேச நான் இங்கு வரவில்லை. பேசவும் கூடாது'' என்று கூறி முடித்தார்.

தந்தையும் மகனும் ஒருவரை யொருவர் பார்த்து முறுவலித்துக் கொண்டது அங்கு ஏற்றப்பட்டிருந்த பல தீபங்களின் ஒளியில் தெளிவாகத் தெரியவே அவருக்குக் கோபம் கிளர்ந்தெழுந்தது. ஆனால் அதை வெளிக் காண்பித்துக் கொள்ள முடியாதவராக உள்ளுக்குள்ளேயே குமுறியபடி, ''எப்படியோ விஜயாலயன் பத்திரமாகத் திரும்பி வந்து சேர்ந்தானே அதைச் சொல்லுங்கள்! இளவலுக்கு வேட்டைக்குச் சென்றபோது ஆபத்து ஒன்றும் நேரவில்லையல்லவா? அதைத் தெரிந்து கொண்டு போகத்தான் வந்தேன்'' என்றார்.

''சர்வேசுவரன் அருளால் நலமாகவே திரும்பினேன்'' என்றான் விஜயாலயன்.

''நல்லது'' என்று கூறியவாறே எழுந்தார் மாதண்டநாயகர்.

''அடடா! என்ன அவசரம்? உணவருந்தி விட்டுச் செல்லலாம்'' என்ற குமாராங்குசன், ''யாரங்கே!'' என்று குரல் கொடுத்தார். அதற்குள் பாராசிரயன், ''இருக்கட்டும் மன்னவா, பாதகமில்லை. நான் எங்கு உணவருந்தினால் என்ன? பழையாறைப் பல்லவ மாளிகையிலும் தங்கள் சோழவள நாட்டின் சோற்றைத் தானே தினமும் உண்கிறேன்! தங்கள் அரண்மனையிலேயே மூன்று நாட்கள் தொடர்ந்து மூன்று வேளையும் உணவருந்த வேண்டிய நிர்ப்பந்தத்தை ஏற்படுத்துங்கள், வருகிறேன்'' என்றார்.

''பராசக்தியின் அருளால் தங்கள் ஆசை நிறைவேறட்டும். விஜயாலயனுக்கு ஆசி நல்குங்கள்!''

''அப்படியானால் இளவலுக்கு சீக்கிரமே விவாகம் நடத்த உத்தேசமா? ஒரு வேளை அதைப்பற்றித்தான் அந்தரங்கமாக இந்தப் பின் மாலைப் பொழுதில் மதியொளியில், தென்றலினிடையில் விவாதித்துக் கொண்டிருந்தீர்களோ!''

''தங்கள் ஊகம் என்றுமே பொய்த்ததில்லை பாராசிரயரே! என் மைந்தன் எனக்கு என்றுமே குழந்தைதான் என்றாலும் அவன் திருமண வயதை அடைந்து விட்டதைப் பொறுப்புள்ள தந்தை என்ற முறையில் நான் மறக்கலாமா?''

''கூடாது! கூடாது! இது கோமகனுக்குத் திருமண வயது மட்டுமல்ல மன்னரே

கடையையே புரட்டிப்போட்டு ஒரே ஒரு பொருளை மட்டும் வாங்கிச் சென்றிருக்கிறாள் அந்தப் பெண்மணி. அது என்ன கண்டு பிடியுங்கள் பார்க்கலாம்! விடை 29ம் பக்கம்.





காமன் கணைகளால் நிரம்பவும் பாதிக்கப்படுகின்ற வயதும்கூட!...விஜயாலயா! நீ எத்தனை வீரர்களைக் களத்தில் வென்றாய் என்பதுடன் எத்தனை அழகிகளை மஞ்சத்தில் வென்றாய் என்றும் கணக்குப் பார்க்கும் தருணம் வந்துவிட்டது!... உன் வயதில் நான்... வேண்டாம்... அந்தப் பழங்கதை எதற்கு? பசித்தவன் பழங் கணக்குப் பார்ப்பதாய் ஏளனம் செய்வீர்கள்!'' என்று கூறி அட்டகாசமாய்ச் சிரித்தார் மாதண்டநாயகர்.

''பாராசிரயரே! என் மைந்தன் அப்படிப்பட்டவன் அல்ல. இயற்கையான இளமைத் துடிப்புக்கள் உடைய ஆரோக்கியமான வாலிபன்தான் என்றாலும் கண்ணிலே தென்படுகிற கட்டழகிகளையெல்லாம் கட்டிலுக்கு இழுக்கும் காமாதுரன் அல்லவே அல்ல'' என்றார் குமாராங்குசன் சற்றுக் குரலை உயர்த்தி.

அவர் கோபத்தைக் கண்டும் காணாதவராக மாதண்டநாயகர் சொன்னார்: ''அப்படியானால் விஜயாலயன் காதல் வயப்பட்டிருப்பதாகத்தான் அர்த்தம். அவனிடம் எச்சரிக்கையாக இருக்க வேண்டும் என்பது உட்கிடை! வேந்தே! உங்களுக்குத் தெரியாதது அல்ல, மன்னர்கள் காமாதுரர்களாய் இருந்தால் ஒருசிலருக்குத்தான் சங்கடம். ஆனால் காதல் வயப்பட்டு விட்டாலோ கணக்கற்றவருக்குக் கஷ்டம்! பெரிய விபரீதங்கள் நிகழும்! கடும் போர்கள் நடக்கும்! பல்லாயிரக் கணக்கான வீரர்கள் செத்து மடிவார்கள். வீர சொர்க்கத்தில் இட நெருக்கடியை ஏற்படுத்துவார்கள்! சாம்ராஜ்யங்கள் சரியும்: புதிய பேரரசுகள் உருவாகும்! விஜயாலயா! நான் சொல்கிறேன் கேட்டுக்கொள்! நாளை அரசு கட்டிலில் ஏறப் போகும் உன்போன்றவருக்குக் காதல் உதவாது! மன்னர்களின் திருமணங்கள் எல்லாம் வசதிக்காக நடப்பனவேயன்றிக் காதலுக்காக அல்ல!''

''என்ன ஆச்சரியம் பாருங்கள், பாராசிரயரே! நானும் இதையேதான் விஜயாலயனுக்குச் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தேன்'' என்றார் குமாராங்குசன்.

''ஆனால் அதற்கு மாற்று மருந்தாக காம வேட்டையாடும்படி துர்ப்போதனை செய்யவில்லை'' என்றான் விஜயாலயன் குத்தலாக.

குத்தீட்டியென ஆழத் தைத்த வார்த்தையை ஓர் எறும்புக் கடியாகப் பாவித்து உதறிய பாராசிரியன், ''அதையெல்லாம் தந்தை எப்படிக் கற்றுத் தரமுடியும்? பல்லவ மாளிகைக்கு வா, நான் உபதேசிக்கிறேன்!'' என்று கூறி விரச பாவத்துடன் பெரிதாய்ச் சிரித்தபடியே வெளியேறினார்.

''ஆகவமல்லா! மாதண்டநாயகரை வழியனுப்பிவிட்டு வா!'' என்று மறவாமல் மரியாதை செய்தார் குமாராங்குசன்.

''சித்தம் பிரபோ!'' என்ற ஆகவமல்லன் பரபரப்புடன் பாராசிரயனைப் பின் தொடர்ந்தான்.

சோழ மாளிகையின் வாசலில் காத்திருந்த ரதத்தில் ஏறுமுன்னர், பாராசிரயன் ஆகவமல்லனைப் பார்க்கத் திரும்பி, அவன் தன் கரத்தில் பற்றியிருந்த தீப்பந்தத்தின் ஒளியில்




ஓரிரு கணங்கள் அவன் முகத்தைக் கூர்ந்து ஆராய்ந்தார். அப்போதும் நெஞ்சில் தொங்கிய பல்லவ இலச்சினையை வலக் கரத்தால் பற்றி இடது உள்ளங்கையில் தட்டியவாறே அதன் மூலமே எதையோ உணர்த்த விரும்புபவர் போல் காணப்பட்டார். பிறகு தமது நீண்ட கழுத்தை ஓரிரு முறை நொடித்துவிட்டுக் கொண்டு, ''ஆகவமல்லா! ஒருவன் முகத்தைப் பார்த்தே அவன் ஆற்றலை எடைபோடுகிற திறமை பல்லவேந்திரருக்கு அடுத்தபடியாக எனக்குத்தான் உண்டு! உன்னைப் பார்த்தாலே சக்கரவர்த்தி ரொம்ப மகிழ்வார்! காரணம், நீ மிகப் பெரிய பதவிகளை அடையக்கூடிய புத்திசாலி என்பது உன் முகத்தைப் பார்த்தாலே எனக்குத் தெரிகிறது'' என்றார். தன் வார்த்தைகளைச் செவியில் வாங்கி மனத்தில் அசை போடச் சற்று அவகாசம் தந்து பிறகு புன்னகையுடன் ''நான் வரட்டுமா?'' என்று கேட்டுவிட்டு ரதத்தில் ஏறினார். நான்கு உயர் ஜாதிப் புரவிகள் பூட்டப்பெற்ற அந்த ரதம் எடுத்த எடுப்பிலேயே வில்லிலிருந்து விடுபட்ட பாணம் போலப் பாய்ந்தோடிக் கண்ணிமைக்கும் நேரத்தில் பார்வையிலிருந்தே மறைந்து விடவும் ஆகவமல்லன் நீண்ட நேரம் சிலையாகி நின்றான்.

இரவு ஆகாரத்தை முடித்துக் கொண்டு தந்தையும் மகனும் அரண்மனையில் அவரவர் பகுதிக்குச் சென்றனர். பஞ்சணையில் சயனித்துக் கண்களை மூடிய உடனேயே விஜயாலயன் மனத்தை ஆக்கிரமித்துக் கொண்டாள்

குவளை. கடைசியாக அவளிடம் விடை பெற்ற காட்சி நினைவில் நிழலாடியது. பிரேமையுடன் கூடிய மிருதுத் தன்மை நிரம்பிய தருணமாக அது இருக்கும் என்று எதிர் பார்த்த அவனுக்குப் பெரு வியப்புக் காத்திருந்தது. ''இளவரசே! எப்போது எங்கள் உதவி தேவையானாலும் ஆயத்தமாய் இருக்கிறோம். தந்தையிடம் கலந்தாலோசிக்க வேண்டுமென்றீர்கள், செய்யுங்கள். ஒவ்வொரு நாளும் உங்களிடமிருந்து உத்தரவை எதிர்நோக்கிக் காத்திருப்போம்'' என்றாள்.

''அந்த உத்தரவைச் சுமந்து கொண்டு நானே வரட்டுமா?'' என்றான் விஜயாலயன் விளையாட்டாக.

''தங்கள் சித்தம் அதுவானால் எங்கள் பாக்கியம்'' என்ற குவளை, அவனை நிகும்ப சூதனி சிலை அருகே அழைத்துப் போனாள். வணங்கி நின்றாள். பின்னர், ''இளவரசே! தங்கள் குத்திட்டியைச் சற்றுக் கொடுத்துதவ வேண்டும்'' என்றாள். அதைக் காளியின் காலடியில் சமர்ப்பித்து எடுத்துத் தரப் போகிறாள் என்று கருதி எடுத்துத் தந்த விஜயாலயன் அவள் சரேலென அதனால் தன் கரத்தில் காயப்படுத்திக் கொண்டதையும், அதிலிருந்து ரத்தம் பீறிட்டு வருவதையும் கண்டு, ''குவளை! குவளை! என்ன காரியம் செய்தாய்!'' என்று பதறினான்.

''இளவரசே! இந்த உடலில் ஓடும் ஒவ்வொரு துளி இரத்தமும் பராசக்தி சாட்சியாகத் தங்களுக்கே அர்ப்பணம்'' என்றாள் குவளை. ரத்தத்தில் விரலை நனைத்து நிகும்ப சூதனிக்குத் திலகமிட்டாள். அவளைப் பின் பற்றி அந்த நாடோடிக் கூட்டத்தினர் அனைவருமே அவ்வாறு செய்தார்கள்.

அந்தக் காயங்களை எளிதில் ஆற்றிவிடுகிற ஆற்றல் அவர்களுக்கு உண்டு என்பது தெரிந்திருந்தாலும் இந்தச் சம்பவம் விஜயாலயன் மனத்தை வெகுவாக நெகிழச் செய்தது.

குவளையைப் பற்றி எண்ணியபோது கூடவே அவனுக்கு உத்தமசீலியின் நினைவும் வந்தது. வேட்டைக்குச் சென்றது, குவளையைச் சந்திக்க நேர்ந்தது, அதன் பிறகு தான் வகுத்துள்ள சில திட்டங்கள் அனைத்துக்கும் ஆதி காரணம் அந்தப் பெண்ணின் பேரெழிலும், பெரும் செருக்கும்தானே என்று எண்ணியபோது உடனேயே தன் வசமிருந்த அவளுடைய சித்திரத்தைக் காண வேண்டும் என்ற அவா கட்டுக்கடங்காமல் எழுந்தது. கவிதையிலே மட்டுமின்றித் திரைச் சீலையிலேயும் அவள் பேரெழிலைச் சித்திரித்திருந்தார் ஓவியக் கலைஞருமான ஒரு புலவர். சாளரத்தின் வழியே வானில் தெரியும் சந்திரனையொத்த முகமும், காமனையும் மயக்கும் கண்களும் செம்பட்டினைப் பழிக்கும் அதரங்களும் பஞ்சை விடவும் மிருதுவான கன்னங்களும் பொற்குடங்களென விம்மும் நெஞ்சகங்களும் எங்கே என வினா எழுப்பும் இடையும் அதன் கீழ் உடுக்கையென விரியும் வனப்பும் எல்லாம் சித்திரத்திலேயே சிந்தையைக் கொள்ளை கொள்ளும் என்றால் நேரில் பார்க்கையில்...

மெய்சிலிர்ப்புடன் ஆசையோடு மஞ்சத்தை விட்டு எழுந்து, நிலவொளியில் சித்திரத்தைக் காண விரும்பி, அது வழக்கமாகச் சுவரில் மாட்டப்பட்டிருக்கும் இடத்தை நெருங்கிய விஜயாலயன் துணுக்குற்றான். சித்திரத்தைக் காணவில்லை! ''நுளம்பா! நுளம்பா!'' என்று தன் அந்தரங்கப் பணியாளனை அவசரமாக அழைத்து வினவிய போது சித்திரம் அவன் கானகத்தில் இருந்த சமயம் தந்தையின் உத்தரவுப்படி அவர் அறைக்குச் சென்று விட்டதாய் அறிந்தான். குழப்பமடைந்த போதிலும் தெளிவு பெற வேண்டியது தந்தையிடம்தானே யன்றிப் பணியாளிடம் அல்ல எனவும் உணர்ந்திருந்த விஜயாலயன் நுளம்பனை அனுப்பிவிட்டு உடனேயே சோழ மாளிகையில் தந்தையின் இருப்பிடத்தை நோக்கி விரைவாக நடந்தான். காவலர்கள் தலை குனிந்து வழிவிட உள்ளே நுழைந்த இளவல் கண்ட காட்சி!

குமாராங்குசன் ஒரு தீபத்தைக் கையில் ஏந்திக் கொண்டு சுவரில் தொங்கிய உத்தம சீலியின் வாளிப்பான வண்ணச் சித்திரத்தின் மீது ஒளியைப் படர விட்டுப் பாசத்தோடு அவள் கன்னத்தை லேசாகத் தடவினார்!

''பெண்ணே! எழுநூறு ஆண்டுகளாகச் சோழ மன்னர்கள் மனத்தில் உயிர்த்தெழாத தன்மான உணர்வை விஜயாலயன் உள்ளத்திலே கிளர்ந்தெழச் செய்த நீ வாழ்க! உன் அழகை வியக்கும்போதே அகங்காரத்தை வெறுத்தாலும் உன்னால்தான் இந்தச் சோழ வள நாடு மீண்டும் தன் புராதனப் பெருமையை அடையப் போகிறது என்று எனக்குத் தோன்றுகிறது. அப்படி ஒரு வெறியை விஜயாலயன் உள்ளத்திலே வளர்த்திருக்கும் உனக்கு நன்றி!'' — ஏதோ அவள் உயிர் பெற்றுத் தம் எதிரே நிற்பது போலவே பாவித்து குமாராங்குசன் மெல்லிய குரலில் பேசிக்கொண்டிருந்ததானது இரவின் அமைதியில் விஜயாலயனுக்கு நன்றாகக் கேட்டது! ''ஆனால் இதில் என் மகன் எதிர்நோக்க வேண்டிய ஆபத்துக்களை எண்ணும்போது தான் என் உடலும் உள்ளமும் பாசத்தின் விளைவான கவலையால் துடிக்கின்றன பெண்ணே!.....''

புன்னகை பூத்த விஜயாலயன், அவரது அந்தரங்க மானசீக உரையாடலின் இடையில் புகுந்து சங்கடத்தை விளைவிக்க விரும்பாதவனாகத் தான் வந்ததையே அவர் அறிய வேண்டாம் என்று கருதியவனாய் வந்த சுவடு தெரியாமல் பின்வாங்கி, சோழ மாளிகையின் தன் பகுதிக்குத் திரும்பினான், நிறைவோடும் நெகிழ்ச்சியோடும்.

ஏறத் தாழ இதே நேரத்தில் பல்லவ மாளிகையை நெருங்கிக் கொண்டிருந்தான் ஆகவமல்லன்! வாயில் காப்போன், ''யார் அங்கே?'' என வினவவும், ''மாதண்ட நாயகரின் ஆணைப்படி வந்திருக்கிறேன்'' என்று ஆகவமல்லன் பதிலிறுத்தது, இருளில் பின்தொடர்ந்து அவனறியாமல் வந்து, ஒரு மரத்தின் பின்னால் தன் பெருவுடலை மறைக்க முடியாமல் திணறிக் கொண்டிருந்த சீனன் காதில் தெளிவாக விழுந்தது. சற்று நேரம் சென்று மாதண்டநாயகர் அனுமதி பெற்று வந்த வீரனொருவன் ஆகவமல்லனை மாளிகையினுள் அழைத்துச் செல்வதையும் பார்த்தான் சீனன். (தொடரும்)

# பியர்லெஸ் வேனிஷிங் க்ரீம் கொண்டு முத்தான மென்மையும் பட்டொளியும் பராமரியுங்கள்.



உங்களது அழகிய சருமத்தோடு உடன் இணைந்து பிரதிபலிக்கக் கூடிய, இந்தியாவில் முதன் முறையாக அறிமுகமாகும் வேனிஷிங் க்ரீம். சிறிதளவு பியர்லெஸ் வேனிஷிங் க்ரீம் எடுத்து முகத்தில் தடவியதும் அது முகம் முழுவதும் படர்ந்து உங்கள் மேனியில் அழகிய பளபளப்பை ஏற்படுத்துவதை உணரலாம். மற்ற வேனிஷிங் க்ரீம்கள் போல எண்ணெய் பசபசப்பு இல்லாமல் புதுமையுடன் விளங்குவது. பியர்லெஸ் வேனிஷிங் க்ரீம். அது மட்டுமல்லாமல் இயற்கையுடன் கூடிய அழகான தோற்றத்தை. சருமத்திற்கு அளிக்கிறது.







KIRON/P/821

உற்பத்தியாளர்கள்:
**பியர்லெஸ்**
காஸ்மெட்டிக்ஸ்,
தபால்பெட்டி எண்:2004
பெங்களூர்-560 020.

**அழகுக் கலையின் ஆரம்பம் ... பியர்லெஸ் வேனிஷிங் க்ரீம்**

கூடவே கிடைக்கிறது பியர்லெஸ் போமேட்

# கனவுகள்



"...ஆகையால் கவிதை என்பதை இந்த விதமாகவும் சொல்லலாம். ஒரு விஷயத்தின் பாதிப்பைத் தன் மனத்தில் உணர்ந்த அதே அழகோடு கொடுக்கப்படும் வார்த்தை உருவில் அதைப் படிப்பவர்களுக்கும் உணர்த்துவது."

மது சொல்ல, ஷீலா இன்னுமாய்த் தன் அழகான கண்களை அகல விரித்துப் பிரமிப்பாய்ப் பார்த்தாள்.

புதுக் கவிதை பற்றி அதன் தாத்தாவான வால்ட் விட்மனிலிருந்து ஆரம்பித்து எஸ்ரா பவுண்ட், எலியட் வழி வந்து பின் இப்போதைய அபி, கல்யாண்ஜி, மீரா, பாப்ரியா வரை மது விவரித்தபோது நீலகிரி எக்ஸ்பிரஸில் 'சி' கம்பார்ட்மெண்டின் சக பிரயாணிகள் தளர்ச்சியுற்றுப் போனார்கள். இரண்டு பேர் கொட்டாவியுடன் வரப் போகும் கனவுகளுக்கு ஆயத்தமானார்கள்.

"கவிதைல இத்தனை விஷயம் தெரிஞ்சு வச்சிருக்கீங்களே. ஆச்சரியமா இருக்கு மது"

"எனக்குங்க."

"என்னது?"

"நிறைய. புடவைப் பிரதாபங்களைத் தாண்டி, நடிக, நடிகையர் விஷயத்தை மறந்து, வித்தியாசமாய்க் கவிதைகளை ரசிக்கும் ஒரு பெண் மகா அதிர்ஷ்டமாய் எதிர் சீட்டில் வந்தது."

"அப்புறம் இப்படிப் பழகிய ஒண்ணரை மணி நேரத்திலேயே இயல்பாய், சிநேகிதமாய்ப் பேசுவது..."

ஷீலா சற்றுத் தலையைச் சாய்த்து, சரித்து அவனின் மெலிசான உதடுகள் உதிர்க்கும் புன்னகை — எவ்வளவு அழகான விஷயமென்பதை மறுபடியுமாக உணர்த்தினாள்.

"அத விடுங்க மது. இலக்கியம்கிறது மகத்தான விஷயமில்லையா?"

"நிச்சயமா. ஆனா இலக்கியம் சாப்பாடு போடாது. போடலே. ம்ஹூம்! இது பத்தி நிறையப் பேசலாம். ஆனா இப்ப வேணாங்க. பேசினா நீங்களும் தூங்க ஆரம்பிச்சுடுவீங்க."

ஷீலா மெல்லியதாய்ச் சிரிக்க, ரயிலின் டடக் டக் குறைந்து, கிரீச்சய்ய்ய்... என்ற மறு கணம் 'டீ காப்பி' என்றது ஜன்னல்.

"டீ சாப்பிடறீங்களா ஷீலா"

"நான் பேசினதில நீங்க ரொம்ப களைச்சுப் போயிட்ட மாதிரி இருக்கு.... ஏய் தம்பி ரெண்டு டீ...."

# உடையும்




அவள் மெளனமாய் அவனையே பார்க்க மது புன்னகைக்க முயன்று தோற்றுப் போனான்.

''ஸாரிங்க ஷீலா. உங்களுக்குத் தெரியாது, எவ்வளவு கசப்புக்களையும் விரக்திகளையும் நான் ஜீரணிக்க அவஸ்தைப்பட்டுட்டு இருக்கேன்னு. ஸ்ப்ச்! இதை விடுங்க, வேறே கேளுங்க.''

''சரி, அப்ப பெர்ஸனலா ஒண்ணு கேட்கவா ''

''யாரையாவது லவ் பண்ணி யிருக்கிங்களான்னுதானே? நான் பண்ணியிருக்கேன். ஆனா அவங்க 'ஊஹூம்' தெரியல. லேட்டஸ்டா ஒருத்தி... இன்னொசண்ட் பியூட்டி. தப்பா நினைக்காதீங்க. கிட்டத் தட்ட உங்க மாதிரியேதான். எதிர்ல அவ வரான்னு வைங்களேன். என்னை விட, என் பக்கத்தில போற பூனையைத்தான் ஆர்வமாக் கவனிப்பா!

''நம்பச் சிரமமா இருக்கோ? நிஜமங்க. என்ன பண்றது?''

சிரித்தாள் ஷீலா.

''ஒருவேளை உங்க கவனத்தைக் கவர்றதுக்காக அப்படிப் பண்ணியிருக்கலாம் இல்லையா ''

''நான் அப்படி நினைக்கல. என் ப்ரண்ட் கூட கிண்டல் பண்ணுவான். நிச்சயமா அவள் உன் கவிதைகள் அத்தனையையும் படிச்சிருப்பாள்னு!''

''இல்ல மது. நீங்க தப்பா அவளைப் புரிஞ்சிருக்கிங்களோன்னு நினைக்கிறேன். பொண்ணுங்க மனசு ரொம்ப விசித்திரமானது.''

''இருக்கட்டுங்க. ஆனா நான் பேசாம இந்த விஷயத்தை விட்டுட்டதுக்கு இது மட்டும் காரணமில்லே. என்னைச் சதா பயமுறுத்தற இந்த அன் எம்ப்ளாய்மெண்ட் பிரச்னை. பி. ஏ. இங்கிலீஷ் லிட். முடிச்சு மூணு வருஷமாச்சு ஷீலா.''

''உங்களைப் பத்தி நீங்க ஒண்ணுமே சொல்லலையே ஷீலா ''

சொன்னாள். அவள் காலேஜ் விவகாரங்களைப் பற்றி, சக தோழிகளிலிருந்து தனிப்பட்டுப் போக நேர்ந்து விடுகிறதைப் பற்றி. அவள் பேசப் பேச, அவளையே பார்த்துக் கொண்டிருந்தான் மது.

'அழகாய் வார்த்தைகள் நழுவும், தவழும், மிதக்கும்....' சட்டென்று கவிதை வந்தது அவன் மனத்தில்.

''ஆமா... என்னைப் பேசச் சொல்லிட்டு நீங்க இப்படி மெளனமாயிட்டா? உங்களைப் பத்தி ஏதாவது சொல்லுங்களேன்.''

''அப்படிப் பெருமையாச் சொல்லிக்கிற மாதிரி ஏதும் இல்லே. சொந்தக் கதை சோகக் கதை. நான் நேத்திக்கு அட்டெண்ட் பண்ணினது எனது இருபத்தைந்தாவது இண்டர்வியூ. இரண்டு நாள்ல வரப்போகும் வெள்ளி விழாத் தோல்விக்காகக் காத்திருக்கேன்.''

''சேச்சே... இந்தத் தடவை கிடைச்சுடும் மது.''

''என்ன! ஜோக் அடிக்கிறீங்களா?''



என்னதான் கவிதை, இலக்கியத்திலும் மூழ்கிக் கவனத்தைத் திருப்பிட்டாலும் திடீர்னு முழிச்சுக்கிற ராத்திரிகள்ல என் எதிர்காலம் பற்றிப் பயமா கேள்விகள் எழும்பறப்ப நான் ரொம்பச் சிரமப்பட்டுப் போயிடறேன். ஒரு வேலை வேலை கிடைச்சிட்டா. அப்புறம் எப்படியோ தெரியல... சரி... நீங்க ஏதாவது....?''

''ஊஹூம். இது வரைக்கும் இல்லே, குறிப்பிடும்படியா. ஆறு நாளை நடப்பதை யாரறிவார்?''

ஷீலா மறுபடி புன்னகைத்தாள். சின்னதாய், மிகச் சின்னதாய் கொட்டாவி வர, ''தூக்கம் வந்துடுச்சு போல. அவ்வளவு அறுத்திட்டனா?'' என்றான்.

''இல்லே, இல்லே, இல்லே.''

''எனக்கு இதுவரைக்கும் அதிருஷ்டம் மேல அவ்வளவு நம்பிக்கை இல்லே ஷீலா. ஆனா இப்ப வந்திருக்கு.''

''புரியலயே...''

''முகம் தெரியா ஒரு ஜோசப் அல்லது பீட்டர் அதிருஷ்டசாலியா பிறந்திருக்கான். எங்கே இருக்கானோ ம்ஹூம்!''

ஷீலா ஒரு கணம் திகைத்து, பின் புரிந்து கொண்டு பாதி வெட்கமாய்ச் சின்னச் சிரிப்பை உதிர்க்க...

''சரிங்க ஷீலா. ரெண்டு மணி நேரமாவது தூங்குங்க. குட் பை'' என்றான் மது.

ஷீலா லேசாகக் கண் விழிக்கையில் மெலிசான நீல வெளிச்சத்தில் எதிரே மது தூங்கிக் கொண்டிருக்க... சக பிரயாணிகள் அத்தனை பேரும் அதையே செய்து கொண்டிருக்க மதுவையே பார்த்துக் கொண்டிருந்தாள், ஷீலா.

'ரயில் புறப்படும் முன் அவசரமாய் ஏறி, எதிரில் வந்து உட்கார்ந்து, கால்பட, ஸாரி சொல்லி, அவள் படித்துக் கொண்டிருந்த கணையாழியைக் கேட்டு, பேச்சை ஆரம்பித்து...

''இதில் கூட என் கவிதை வந்திருக்கு ஷீலா'' என்று காட்டியதும் தான் பிரமித்துப் போய்....

மனசு இப்படி ஒரே நாளில் மயங்கிப் போவது சாத்தியமோ ...ஒருவேளை இதற்கு முன் இவன் கவிதைகளை, முகம் தெரியாமலேயே தீபத்திலேயும், கணையாழியிலுமாய் ரசித்துக் கொண்டிருந்ததுதான் இப்போது இப்படி மனசின் இந்த மாற்றத்திற்குக் காரணமோ...எத்தனை இயல்பாய், எளிமையாய்ப் பேசி....'

அவசரமாய்த் தன் வானிடி பேக்கைத் திறந்து டைரியில் ஒரு பக்கத்தைக் கிழித்து,

'மது நினைவிருக்கா? இருக்கணும் 'என்னை கோவை போனதும் இது கூட வச்சிருக்கிற விலாசத்துக்கு அப்ளை பண்ணுங்க. நிச்சயம் வேலை கிடைக்கும். ஏன்னா அது எங்க அங்கிளோட கம்பெனி. அப்ளை பண்ணிட்டு எனக்கு எழுதுங்க.

அப்புறம் உங்க கிட்டச் சொல்லாம விட்ட ஒரு விஷயம்: உங்களை நேரிடையாத் தெரியாதே தவிர, உங்க கவிதைகளை நிறையப் படிச்சிருக்கேன். எனக்கு ரொம்பவும் பிடிக்கும். இப்ப உங்களையும்....

யாரோ முகம் தெரியாத ஜோசப் அல்லது பீட்டர்... அதிருஷ்டசாலின்னு சொன்னீங்களே...அந்த அதிருஷ்டக்காரனா நீங்க ஏன் இருக்கக் கூடாது? காத்திருக்கேன்.''

அவசரமாய் எழுதி,' அழகான சின்ன கிரீட்டிங் கார்டுக்குள் வைத்து, மதுவின் கால் பக்கமாய் இருந்த அவன் கிட் பாக்கின் 'ஸைட்' ஜிப்பைத் திறந்து உள்ளே வைத்தாள் அவசரமாக. மனத்திற்குள் குறுகுறுவெனச் சந்தோஷம் ஊற அப்படியே வெளியே வெறித்திருந்தாள்.

''ஹலோ ஷீலா... குட் மார்னிங். எப்ப முழிச்சீங்க?''

''கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி. அரை மணி நேரத்தில ஸ்டேஷன் வந்திடுமே. நீங்க முழிக்காம இருந்தீங்கன்னா எழுப்பியிருப்பேன்.''

''சை! திடீர்னு அநியாயமா ஒரு ஆசை வருதுங்க.''

''என்னது ''

''இன்னும் ஐநூறு மைல் தள்ளி கோவை இருந்தா எவ்வளவு நல்லா இருக்கும். நெறய நேரம் உங்க கிட்டப் பேசலாமே... ம்ஹூம்.. இப்ப மீதிப் போறது இருபது நிமிஷம்தான்.''

''அப்புறம் ரயில் ஸ்நேகம் மாதிரி எல்லாம் ஆயிடும்னு சொல்றீங்களா? மது நான் ஒரு ஜோஸ்யம் சொல்லட்டுமா? அப்படி நிச்சயம் ஆகப் போறதில்லே.''

மது ஆச்சரியமாய்ப் பார்த்தான், அவளையே.

''அதை விட மோசமா இப்பவே... ஓ... ஸாரி... கோபமாப் பார்க்காதீங்க! எதை வச்சுச் சொல்றீங்க?''

''எதை வச்சோ... உண்மையாகுதா இல்லையா பாருங்க.''

அவன்: ''சாதாரண ஜோக்குக்குக் குலுங்கிகுலுங்கிச் சிரிக்கும்படியாயிடுத்து!''

இவன்: ''ஓ! 'பாஸ்' சொன்ன ஜோக்கா?''

அவன்: ''இல்லே இல்லே, நம்ம ராமசாமி ஜோக்கைச் சொன்னபோது அவனும் நானும் ஆட்டோவில் போய்க்கிட்டிருந்தோம்.

-உ. ராஜாஜி



கஜபதி அண்ட் கோ

கமல்

எங்க தெரு பிள்ளையார் கோவில்லே பூஜை.. ஆளுக்கு ஒரு ரூபாய் கொடுத்தால் நல்லாயிருக்கும்!



எங்க தம்பி ஸ்கூலில் 'லாட்டரி டிக்கட் போட்டிருக்காங்க. ஆளுக்கு ஒரு ரூபாய் டிக்கட் வாங்கணும்!



யூனியன் வளர்ச்சி நன்கொடை ஒரு ரூபாய் விதம் தாங்க!



நம்ப சர்ச்சிலே ஏழைகள் தினம் ஏற்பாடு செஞ்சிருக்காங்க ஒன் ருபி டொனேஷன் எல்லாரும் கொடுங்க!



எங்க கிராமத்திலே அம்மனுக்கு கூழ் வாக்கறாங்க. ஆளுக்கு ஒரு ரூபாய் வசூல் பண்ணலாம்னு பார்த்தேன். வசூல் பண்ணினாலும் ஒண்ணுதான், மொத்தமா அஞ்சு ரூபா நம்ப கையிலிருந்து போட்டாலும் ஒண்ணுதான்.



''சரி, போறதுக்குக்கு முன்னால காலங் காத்தாலே ஒரு நல்ல உண்மையை, நிஜத்தை கவிதையாச் சொல்லலாமான்னு யோசிக் கிறேன்.''

''சொல்லுங்க.''

''வழியில் மலர்ந்த அழகு ரோஜாவின், சுகந்த ஸ்நேக மணம் ...மூணு சுழி 'ண'ங்க.. ம்ம்.... இனிதான் என்னுள், இன்று போல் என்றுமே.''

சின்னச் சிரிப்புடன் மது சொல்ல, கதை யின் முதல் பாகத்தில் சொன்ன விதமாக ஷீலா புன்னகைத்து, பின் வெட்கப்பட்டு மௌனிக்க ரயிலின் வேகம் குறைந்து..

**கோ**வை ஜங்ஷன்.

''வாடா, வா!''

வரவேற்றான் ஊரிலிருந்து விஜயம் செய்திருந்த அக்கா, ''மாமா...மாமா'' அவனின் செல்லங்கள் மொய்த்தன. சின்னச் சின்னக் கேள்விகளால் பிறண்டி, அவனின் பிட் பேக்கைப் பிடுங்கிக் கொண்டுபோயின. அதுகளுக்கு ஒன்றும் வாங்கி வராததில் அசடு வழிந்துவிட்டு உள்ளே போனான் மது.

''ஹை...அழகு படம்'' என்றாள் ஐந்து வ்யது பிந்து ஷீலா வைத்திருந்த கிரீட்டிங்கை எடுத்தபடி.

''அதை எனக்குத் தந்திடுடி'' என்றான் ஏழு வயது பிரபாகர். படத்தைப் பிடுங்க எத்தனிக்க, ஷீலாவின் கடிதம் நழுவிக் கீழே விழுந்தது.

''விழுந்த பேப்பரை நீ வச்சுக்கடா. எனக்குப் படம்'' என்றபடி பிந்து ஓடி அம்மாவிடம் அடைக்கலம் புக, ஆதரவாய்ப் பேச வைக்க, துளியூண்டு பிரபாகர் ஆத்திர மானான்.

''ஆமா... எனக்கு இந்தக் காயிதம்... அவளுக்குப் பட... க்கும்....''

கோபமாய் சர்புர்ரென்று கிழிந்தது கடி தம். துண்டுகள் மெல்லப் பறந்தன.

**எ**திர்பார்த்த அடிதான் என்றாலும் வலித் தது. வெள்ளி விழா தோல்வி, 'மெட்ராஸ் போனது இண்டர்வியூவுக்குத்தானா இல்ல பத்திரிகை ஆபீசுக்கான்னு புரியலே' என்று ஆரம்பித்து, கோபமாய்க் கத்தி பின் சலித்து விட்டு அப்பா போயாயிற்று. அம்மா ஆறுதல் வார்த்தைகளால் தொண தொணத்துக் கொண்டிருக்க, அக்காவுக்கு ஆயிரத்தெட்டு சந்தேகங்கள்.

மனசு கனக்க, வெளியில் போனான் மது. மரத்தடியில் சாய்ந்து, அழுத்துக் கொண்டபடியே, சென்னைப் பயணத்தை நினைவுகூர... சட்டென்று நினைவில் வந்தாள் ஷீலா. எரிச்சல்களும், விரக்தியும் வெள்ள மாய்ப் புரள்கையில் அவள் நினைப்பு ஒரு 'மிதப்பு' போலத் தெரிந்தது அவனுக்கு.

'அவ லெட்டர் போட்டா... அந்த நட்பு இன்னும் தழைத்து....' மது நினைத்துக்கொண் டிருந்த அதே சமயத்தில் பல மைல்கள் தள்ளி இருந்த ஷீலாவும்,

'அநேகமாக லெட்டரை மது பார்த் திருக்கணும். நாளைக்கு... இல்லே... எப்படி யும் இரண்டு மூணு நாள்ல லெட்டர் வரும்' என்றாள் மனதிற்குள்.

7

சித்திரம்:

கதை: அபர்ணா நாயுடு
















ரோஸியைப் பிடிக்கலேங்கறதுக்காக இப்படி எது வேணாலும் சொல்லிடறதா
உண்மையைச் சொல்றேன். உனக்கு அது பிடிக்கலேன்னு நீ ஒதுங்கிக்கறதைப் பத்தி ஆட்சேபணை இல்லே.


இது பலமுறை நீ சொல்ற சமாசாரம் தான். என் சிநேகிதியைப் பத்தி இழிவாப் பேசறவளோட எனக்குப் பழக்கம் வேண்டியது இல்லே.
ஓ.கே. போறேன்.


லிஃப்ட் தரலாமா?
தேவையில்லே.
தாங்க்ஸ், நான் வரேன்.


மாலினியுடன் கார் புறப்பட்டதும்
உன் ஃப்ரண்டு ரொம்பக் கோபமா இருக்காப் போல இருக்கே! அவகிட்டே நிக்கறதைக் கூட விரும்பாத மாதிரி இல்லே கிளம்பிட்டே!
அவ சுத்த கட்டுப்பெட்டி. ஃப்ரீயா- சோஷியலாப் பழகினா உடனே தப்புச் சொல்லிடறதா?


அவ சொல்றதும் சரிதானே! முன்னே பின்னே தெரியாத என் கூட வந்துட்டே, நான் இப்போ உன்னை என்ன வேணா செய்யலாம் இல்லியா?
ஐயோ? நீங்க யாரு?
தொடரும்



"அன்னை பராசக்தி" "அங்காள பரமேஸ்வரி தாயே துணை"

சேலம் சித்த வைத்தியர்

# டாக்டர் S. R. சிவராஜ்

அவர்களின் சாதனை

**சிவராஜ் சித்த வைத்தியசாலையில் தயாராகும் மருந்துகள், பிணிகளை நீக்கவும், புத்துயிரளிக்கவும் பெரிதும் உதவுகிறது**

○ குழந்தை பாக்கியம் (கெர்ப்பணுக்கள்) இல்லாதவர்கள், ○ ஆண்மை வீரியம் இல்லாமல் பலஹீனமடைந்தவர்கள், ○ வாலிபத்தை வீணாக்கி, சக்தி இழந்தவர்கள், பயமுள்ளவர்கள் ○ கல்யாணம் செய்யப் பயந்து காலம் கடத்தி வருபவர்கள், ○ அதிக உஷ்ணம் — கண் எரிச்சல் — தூக்கமின்மை — உடல் வலி, ○ நரம்புத் தளர்ச்சி — உடலுறுப்புக்கள் தளர்ச்சி — நடுக்கம், ○ மற்றும் உங்கள் ரகசிய வியாதிகளுக்கும்

நாள்பட்ட ஆஸ்துமா — இளைப்பு — இருமல் — தும்மல் — மூக்கடைப்பு — பீனிசம் — சைனேஸ பிலியா — இருதய வலி — படபடப்பு — அன்னை விலாஎலுத் தூக்கி தூக்கி மூச்சு வாங்குதல் — கோளமு கட்டு, பனி, மோடம், மழை காலங்களில் ஏற்படும் இளைப்பு — கர் முர்ரென்று மேல் மூச்சு போன்ற கப வியாதி பித்தத்தினாலும், வாய்வுனாலும் ஏற்படும் மலச்சிக்கல் — மலக்கட்டு, வயிற்றுவலி — குடல் புண் — பித்த மயக்கம் — தலைவலி — தலைபாரம் நாள்பட்ட ஒரு தலைவலி—கண் பார்வையில் பூச்சு பறப்பது போலிருத்தல் பசியின்மை — பொருமல் — வயிருப்புசம் — காமாலை — சோகை — இரத்தச்குறைவு மேகத்தினாலும் — தொத்து வியாதியினாலும், விஷப்பூச்சுகள் கடியினாலும் ஏற்படும் சரும நோய்கள்—படைகள்—சொரல் —அரிப்பு — கருகிற, செந்நிற படைகள் — செதில்களாக உதிரும் கிரந்தி படைகள் — வெண் மேகம், பாதவெடிப்பு — பனி வெடிப்பு முதலான நோய்கள். பெண்களுக்கு ஏற்படும் சகலவித நோய்கள். மேலே குறிப்பிட்ட வியாதியஸ்தர்கள் எமது பிரதம டாக்டரை

**✲ சென்னையில் கீழ்க்கண்ட இடங்களில் ✲**

சந்தித்து வைத்திய ஆலோசனை பெறலாம்

கீழ்க்கண்ட தங்குமிடங்களில் எமது கிளை அலுவலகத்தில் எமது மருந்துகள் கிடைக்கும்

---

கிளை வைத்தியசாலை

**சென்னை-1**

தேதிகள் : 1 முதல் 3 தேதி வரை

பிரதம வைத்தியர்

**ஹோட்டல் ரோலக்ஸ் ரூம் நெ. 5ல்**

போன் : 24236

(190 N S C போஸ் ரோடு (சைனா பஜார்)
(பூக்கடை — டெலிபோன் ஆபீஸ் எதிரில்)
சென்னை-1

பார்க்கும் நேரம்: காலை 8 மணி to இரவு 8 மணி

கிளை வைத்தியசாலை

**சென்னை-2**

தேதிகள் 4ந்தேதி முதல் 8ந்தேதி வரை

பிரதம வைத்தியர்

**ராமச்சந்திரா லாட்ஜ் ரூம் நெ. 3ல்**

போன் : 846526

7. அத்திப்பட்டன் தெரு மவுண்ட் ரோடு
PORR & சன்ஸ் — பெட்ரோல் பங்க்
மேற்குபுரம், சென்னை-2

காலை 8 மணி முதல் இரவு 8 மணி வரை

---

**ஆலோசனை கட்டணம் ரூ. 10-00 ✲ சிகிச்சைக் கட்டணம் தனி**

எமது கேட்லாக் வேண்டுவோர் ரூ. 1-00 ஸ்டாம்ப் அனுப்பியோ: M.O. செய்தோ பெறலாம்

**எமது உயர்ந்த — விசேஷ — ஸ்பெஷல் மருந்துகள் கிடைக்கும்**

**உயர்தரசிகிச்சை 1 மாதம் ★ விசேஷ சிகிச்சை 1 மாதம் ★ ஸ்பெஷல் சிகிச்சை 1 மாதம்**

| A வகுப்பு | B வகுப்பு | C வகுப்பு | A வகுப்பு | B வகுப்பு | C வகுப்பு | மீடியம் | ஸ்பெஷல் | 1 நெம்பர் |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1500-00 | 750-00 | 500-00 | 400-00 | 300-00 | 200-00 | 175-00 | 150-00 | 115-00 |

ஹெட்டாபீசுக்கு லெட்டர் எழுதி V.P.P. மூலமும் பெறலாம். தேவையான சிகிச்சைக்கு டிராப்ட் மூலம் (பேங்க் ஆப் இந்தியா) வாங்கி அனுப்பினால் ரிஜிஸ்டர் பார்சல் மூலம் பெறலாம். டாக்டர் S. R. சிவராஜ் ஹெட்டாபீஸில் 11, 16, 17, 18, 19, 20, 27, 28, 29, 30 தேதிகள் வரை சந்திக்கலாம். மற்ற நாட்களில் வெளியூரில் இருப்பார்.

---

## H.O. சிவராஜ் சித்த வைத்தியசாலை

சென்ட்ரல் டாக்கீஸ் வடபுரமுள்ள ஏரியில் **சேலம் — 636 007**



## திருத்தலம் கண்டேன்

# கனவில் வந்த சகாயமாதா!

கிறிஸ்தவ சமயத்தைச் சார்ந்த திருத்தலங்கள் பெரும்பாலும் அன்னை மரியாள் எழுந்தருளியிருக்கும் ஆலயங்களாகவே இருக்கும். மனமுருகி மன்றாடும் மக்களின் வேண்டுதல்களுக்கு அவ்வப்போதே இறைவனிடமிருந்து வரங்களைப் பெற்றுத் தந்து விடுகிற கருணைத் தாய் என்பதால் அந்தக் கன்னி மரியாள் ஆலயங்கள் அனைத்தும் ஆறுதல் தேடும் மக்களின் அடைக்கலத் திருத்தலங்களாக விளங்குகின்றன. அதிலே ஒரு திருத்தலம்தான், சென்னை வேளச்சேரியில் அண்மையில் எழுந்தருளியிருக்கும் 'இடைவிடா சகாய மாதா' ஆலயம்.

அன்னை மரியாளின் அழைக்கப்படும் பெயர்களுக்கேற்ப அவளது திரு உருவங்கள் அமைந்திருக்கும். அவ்வாறே, இடைவிடா சகாயாமாதா என்ற பெயரில் விளங்கும் தேவ மாதாவுக்கு ஒரு தனி உருவம் உண்டு. அந்தச் சிறப்பு மிக்க உருவப் படம் ஒன்று விசேஷமாக ஆசீர்வதிக்கப்பட்டு ரோமிலிருந்து கொண்டுவரப்பட்டு, 1978ம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் இவ்வாலயத்தில் ஸ்தாபிக்கப்பட்டது.

தனக்குப் பின்னால் நிகழப் போகும் சிலுவை மரணத்தை இறைவனின் தூதுவர்கள் நினைவுபடுத்த, அதைக் கண்டு சங்கடமடைந்து தன்னைப் பதற்றத்துடன் பற்றிக்கொள்ளும் பாலகன் ஏசுவின் துன்பத்தை எல்லாம் தான் ஏற்று, தன் பாலகனுக்கு ஆதரவளிக்கும் வகையில் அரவணைக்கத் துடிக்கும் அன்புத் தாயை இச் சித்திரத்தில் காண்கிறோம்.

கீழ்த் திசைக் கலையம்சத்துடன் விளங்கும் இவ்வோவியத்தைத் தீட்டியது யார், தீட்டப்பட்ட காலம் என்ன, என்ற விவரங்கள் கிடைக்கவில்லை. இந்த ஓவியம் பதினைந்தாம் நூற்றாண்டின் இறுதியில் சில வர்த்தகர்கள் மூலம் கிரீட் தீவிலிருந்து ரோம் நகருக்குக் கொண்டுவரப்பட்டது. சில தனிப்பட்ட மனிதர்கள் சுயநல நோக்குடன் தாங்களே இச்சித்திரத்தை மறைத்து வைத்திருந்தனர். மறைத்து வைத்திருந்த குடும்பத்தின் சிறுமி ஒருத்திக்கு அன்னை மரியாள் காட்சியளித்து, மறைத்து வைக்கப்பட்டிருக்கும் ஓவியத்தைப் பலருக்கும் பயனளிக்கும் வகையில் புனித அகுஸ்தீன் சபைக் குருக்கள் நிர்வகித்து வந்த புனித மத்தேயு ஆலய பீடத்தில் ஸ்தாபிக்கும்படி கேட்டுக்கொண்டாள். உடனடியாக அவ்விதமே செய்யப்பட்டது. ரோம் முழுவதும் இவ்வோவியத்தின் புகழ் பரவ, பல அற்புதங்கள் நிகழ்ந்து வந்தன.

1798ல் பிரெஞ்சு நாட்டின் படை எடுப்பால் ரோம் நகரம் பெரும் அழிவுக்குள்ளாயிற்று. அப்போது புனித மத்தேயு ஆலயமும் பாதிக்கப்பட்டபோது, அதை நிர்வகித்து



வந்த குருக்கள், அவ்வோவியத்தை ஒரு துறவற மடத்துக்கு மாற்றினார்கள். இப்படிப் பல கை மாறி மீண்டும் பழைய ஆலயத்திலேயே ஸ்தாபிக்கப்பட்டது.

இந்த ஓவியத்தின் நேரிடைப் பிரதிகள் ஆசீர்வதிக்கப்பட்டு உலகின் பல இடங்களிலும் ஸ்தாபிக்கப்பட்டு சிறப்பு வழிபாடுகள் நடைபெற்று வருகின்றன. இவ்விதம்தான் சென்னையிலும் இடைவிடா சகாய மாதா கோயில் நிர்மாணிக்கப்பட்டது.

ஆண்டுதோறும், உயிர்த்த ஞாயிறை (ஈஸ்டர்) அடுத்த ஆறும் ஞாயிறு அன்று இவ்வாலயத் திருவிழா மிகச் சிறப்பாக நடைபெறுகிறது.

பிற சமயத்தைச் சேர்ந்த மக்களும் அன்னையின் அருளினைப் பெற, அவள் ஓவியத்தின் முன் மன்றாடி வணங்க வருவதை இத்திருத்தலத்தில் காணலாம். பலரும் தம் நன்றிக் காணிக்கைகளை நேரிடையாகவும், தபால் வழியும் செலுத்திக் கொண்டிருக்கின்றனர்.

—பா. ஜோசப்ராஜ்—

ஜெயந்தன்

7

**மெல்ல ஓசையில்லாமல் வேண்டாத பழசிலிருந்து விடுபட்டு....**

சுலோசனா மதுரையிலிருந்து திரும்பி ஒரு பதினைந்து நாளிருக்கும். ஒரு நாள் மாடியில், வந்திருந்த வாரப் பத்திரிகைகளைப் பார்த்துக் கொண்டிருந்தாள். ஒரு பத்திரிகையில் தான் தொடங்கவிருந்த தொடர் கதை ஒன்றுக்கு அதன் ஆசிரியர் முன்னுரையாக நிறையவே சொல்லியிருந்தார். அதில் அவர் தனது இலக்கியக் கொள்கை பற்றியும், அதற்கு இசைவாக அமையும் தனது கலைவடிவம் பற்றியும், வழக்கமாக வாசகர் ரத்த நாளங்களில் குண்டு வெடித்து, வாரம் தப்பினாலும் சஸ்பென்ஸ் தப்பாத திகில் முடிவுகளைத் தன்னிடமும் சில வாசகர்கள் எதிர்பார்க்கும் 'அநியாயம்' பற்றியும் விஸ்தாரமாகவே பேசிவிட்டுக் கடைசியில் இப்படி முடித்திருந்தார்:

''இந்த நாவலில் ஒரு பெண்ணுக்கு நேர்ந்த அவலங்களை, அவள் பட்ட மன வேதனைகளை, அந்த வேதனைகள் மன நோயாகத் திரிந்த துர்ப்பாக்கியத்தை, நான் எழுதியிருக்கிறேன். இதுவே எவ்வளவு துரதிர்ஷ்டம்! ஒரு பெண்ணின் உணர்வுகளை ஓர் ஆண், அவன் எவ்வளவு கொம்பனாக இருந்தால் என்ன, எப்படி முழுமையாக வெளிப்பாடு செய்ய முடியும்? இந்தக் கதையையே ஒரு பெண் எழுத்தாளர் செய்தால் எவ்வளவு உண்மையாக இருக்கும்! ஆனால் இருக்கிற நமது ஒன்றிரண்டு பெண் எழுத்தாளர்களோ மொண்ணையான ஆண் எதிர்ப்புக் கோஷங்களை எழுப்பிக் கொண்டும், தாங்கள் கண்ணால் பார்த்துக்கூட இருக்காத 'பாரீஸ் இசைக் கலைஞனையும், பாரஸ்ட் ஆபீஸர்களையும் வைத்துக் கதை பின்னிக்கொண்டிருக்கிறார்கள்.

போகட்டும். நான் பொன் வைக்கிற இடத்திலே பூ வைத்திருக்கிறேன். ஆண்மையில் பெண்மை, பெண்மையில் ஆண்மை என்று பாரதி சொன்னானே, அந்த விகிதாசாரத்தில் நான் என்னுள்ளிருக்கும் தாய்மையின் உதவி கொண்டு இந்த நாவலைச் செய்திருக்கிறேன். இனியும் செய்வேன். இங்கு பெண்களே தங்களைப் பற்றி எழுதுகிற காலம் வரும்வரையும் — வருவதற்காகவும்.''

இது சுலோசனாவுக்கு மிகச் சரியென்றுதான் பட்டது. உதாரணத்துக்கு ரகு தன்னை ஏய்த்துத்தான் தீருவது என்று முடிவு கட்டிக் கொண்டு செய்த ஒவ்வொரு சாகசத்தின் போதும் தன் மனம் எப்படிப் போராடிப் போராடித் தோற்று மெல்ல மெல்ல அவன் பக்கம் சரிந்தது என்பதை ஓர் ஆண் எப்படி உணர முடியும்?

இன்னொரு உதாரணமும் இருக்கிறதே. அன்று மதுரை ரயிலடியில் தன்னை வழி அனுப்புகிறேன் என்று வரதராஜுலு திடீரென்று வந்து குதித்தபோது அவனது உடை அழகைக் கண்டு தான் தன்னையறியாமல் திகைத்துப் போனது. ஒரு உடைக்கு இவ்வளவு வலிமையா? வரதராஜுலு ஏற்கனவே அழகும் கம்பீரமும் மிக்க ஆசாமி தான். ஆனால் அந்தப் போலீஸ் உடை அப்படியா அவனது அழகையும் கம்பீரத்தையும் பத்து மடங்கு இருபது மடங்கு பெருக்கிக் காட்டும்!

அந்தப் பத்து நாட்களில் அவனை அவ்வளவாக மதிக்காத தனது மனம், ஏன் அந்த ரகுவின் காரணமாக சகல ஆண்களின் மேல் எழுந்த வெறுப்பின் ஒரு பகுதியாக இவனையும் இகழ்ந்து சந்தோஷித்த மனம், அவனை அந்தச் சீருடையில் கண்டதும் திடீரென்று பழசுகளை உதறிவிட்டு அவன் ஆண்மையை அணைக்க ஓடியதே அது என்ன விந்தை!

அவன் வந்த மாலை நேரத்தை மீண்டும் நினைத்துப் பார்த்தாள்.

வழியனுப்புவதற்காக வந்த மாமா, அத்தை, ருக்கு, ஊரிலிருந்து வந்திருக்கும் அவளது அண்ணன் ஸ்ரீதரன் எல்லோரும் ரயிலடிக்கு வந்திருக்கிறார்கள். ரயில் நாற்பத்தாறு நிமிடங்கள் தாமதம் என்று தெரிகிறது. பொழுதைக் கழிக்கும் உபாயங்களில் ஒன்றாக, ருக்கு பிளாட்பாரத்தில் இருக்கும் எடை மிஷினில் எடையும், ஜோஸியமும் பார்க்கலாமா என்று கேட்கிறாள்.



அத்தையும் மாமாவும் மட்டும் பெஞ்சிலேயே இருக்க இவர்கள் மூவரும் எடை பார்க்கும் பொறியிடம் வருகிறார்கள்.

முதலில் ருக்கு ஏறி நின்று காசைப் போடுகிறாள். எடை ஐம்பத்து ஒரு கிலோ. 'பரவாயில்லை. ஒரு கிலோ ஏறியிருக்கே' என்று சந்தோஷப்பட்டுக்கொள்ளும் அவள் உடன் சீட்டைத் திருப்பி சோதிடம் பார்க்கிறாள்.

'நீ முயற்சி செய்தால் மகத்தான வெற்றிகள் உனக்குக் காத்துக் கிடக்கின்றன'

'அம்மாடி! ரொம்பப் பெரிய ஜோஸியம் இருக்கு' இவர்கள் மூவரும் சிரிக்கிறார்கள். பக்கத்தில் நிற்கும் ஒருவர் கூட புன்னகை செய்கிறார்.

அடுத்து கலோசனா ஏறி நின்றதும் ஜோதிடம் இப்படி வருகிறது: 'உனது திட்டமிட்ட செயல்களின் காரணமாகப் பெரும் பொறுப்புக்கள் உன்னிடம் ஒப்படைக்கப்பட இருக்கின்றன.''

''ஐயோ, நானும் என் திட்டமும்'' — இவள் சிரிக்கிறாள்.

ஸ்ரீதரனுக்கு..''நீ எதிர்பாலினருக்கு மிகக் கவர்ச்சியான நபர்' என்று வருகிறது.

''என்ன ஜோசியம் சொல்லுது இது.ஒனக்குச் சொல்ல வேண்டியதை எனக்கும், எனக்குச் சொல்ல வேண்டியதை ஒனக்கும்'' என்கிறான் அவன்.

ருக்கு குறுக்கிட்டுச் சொல்கிறாள். ''அது ஒண்ணும் தப்பாச் சொல்லல்லே. நீங்க தான் தப்புப் பண்ணிட்டிங்க. மொதல்ல நீயும் அப்புறம் இவளும் காசைப் போட்டிருக்கணும்.''

அவர்கள் சிரித்துக் கொண்டிருக்கும்போது இவளுக்குப் பின்னால் அந்த 'ஹலோ' கேட்கிறது.

திரும்பிப் பார்த்தால் வரதராஜுலு தனது போலீஸ் உடையில். இதற்கு முன் இவனை இரண்டு நாள் பார்த்திருக்கிறாள். ஆனால் அந்த இரண்டு நாளிலும் இவன் சாதாரண உடையில் இருந்தான். அப்போது தான், இவன் தனது உத்தியோக சீருடையில் எப்படி இருப்பான் என்று கற்பனை செய்ததில்லை. செய்திருந்தாலும் இந்த உருவம் தனது கற்பனைக்கு வசப்பட்டிருக்காது போலிருக்கிறதே! இவனென்ன இப்போது பத்து ராஜ்யங்களை ஜெயித்துக் கழுத்தில் வாகை மாலை சூடி வருகிறானா? இவனுக்கே தனது உடை தரும் கம்பீரம் உணர்வாகிப் பதிந்திருப்பது போலல்லவா இருக்கிறது. நடையில் என்ன அவ்வளவு கம்பீரம்!



Wish you a happy journey சொல்கிறான்.

தேங்க்யூ சொல்லும் இவள் தனது சிலாகிப்பை மறைக்கும் முகமாகவும் ஸ்ரீதரனை அறிமுகப்படுத்துகிறாள்.

'மீட் மிஸ்டர் ஸ்ரீதரன்.இவளோட பிரதர். நெய்வேலியிலே என்ஜினியரா இருக்கார். அண்ட் ஹி இஸ் மிஸ்டர் வரதராஜுலு எஸ். ஐ. காலேல பேசல? என் அண்ணாவோட பிரண்ட்.''

''கிளாட் டு மீட் யூ.''

அவர்கள் கை குலுக்கிக் கொள்கிறார்கள். ஸ்ரீதரனும் ஒன்றும் பூஞ்சை உடம்புக்காரனல்ல. ஆனால் இப்போது இவனுக்கு முன்னால், இவனது பின்னணியில் அவன் 'அற்றுப்போய்' தெரிகிறான்.

மனித உடம்பின் எந்தப் பகுதி இந்த ஆடை? இதற்கு அந்த உடம்பையே விழுங்கிவிடுகிற சக்தி எப்படிக் கிடைக்கிறது? இது அவனது குணத்தையே அல்லவா மாற்றிவிடுகிறது? இவனது நடையே அல்லவா மாறியிருக்கிறது. அந்த 'ஹலோ'வில் கூட இந்த உடையின் குரல் இருக்கிறதே?

மனித சரித்திரத்தில் நேற்று வந்து ஒட்டிக் கொண்டதல்லவா இந்த ஆடை? அதற்குள் இதற்கு மூலத்தையே விழுங்கிவிடும் சக்தியா? இவ்வளவுக்கும் இதன் முடிவு எப்படிப்பட்டது? இதன் கவர்ச்சியால் ஒருத்தி மயங்கி ஒருவனைக் காதலிப்பதாக வைத்துக் கொண்டால் அந்தக் காதலின் உச்சத்தில் காணாமல் போய்விடக் கூடிய — போயாக வேண்டிய ஒன்று.

இந்தத் திடீரென்ற, படு குறும்பான கற்பனை இப்போது கலோசனாவைத் தானறியாமல் களுக்கென்று சிரிக்க வைத்துவிட்டது.

சற்று முன் மேலே வந்து தானும் ஏதோவொரு இதழைப் புரட்டிக் கொண்டிருந்த ஜானகி, 'என்னடி, தானா சிரிக்கிறே? கிறுக்கு கிறுக்குப் புடிச்சுக்கிச்சா?' என்று கேட்டாள்.

''ஒண்ணுமில்லே, ஒரு ஜோக் போட்டிருந்தான்.''

''என்ன ஜோக் அது?''

கலோசனா மழுப்பினாள். ''எனக்குப் பிடிக்கிற ஜோக்கெல்லாம் ஒனக்குப் பிடிக்காது. அப்புறம் இதுக்குத்தானாடி சிரிச்சேன்னு சண்டைக்கு வருவே'' என்று சமாளித்தாள்.

பிறகு அவளது சிந்தனை மீண்டும் அந்த எழுத்தாளர் முன்னுரை மேல் சென்றது.



## நானே என்பது இதுதான்

மேற்படி தலைப்பில் ரிச்சர்ட் ஹாமில்டன் தீட்டிய ஓவியத்துக்கு ஏற்ப கல்கியில் இரண்டு பக்கங்களுக்கு மேற்படாத அளவில் ஒரு சிறுகதை எழுதி அனுப்புங்களேன். பிரசுரமாகும் கதைக்குப் **பரிசு ரூ. 100/-**

பிரசுரத்துக்கு ஏற்கப்படாதவற்றைத் திருப்பி அனுப்புதல், கடிதப் போக்குவரத்து கிடையாது.

**முடிவு தேதி - மார்ச் 15.**

உறையின் மேல் "நானே என்பது இதுதான்" என்று அவசியம் குறிப்பிடவும்.

தான் ஏன் தனது கதையை எழுதக் கூடாது? இது மட்டுமென்ன சாதாரண யுராஜிடியா? சொல்லுகிற முறையிலே சொன்னால் இதுவும் நிச்சயம் ஒரு இலக்கியமாக ஆகித்தான் தீரும். அடேயப்பா அன்று தன் மனம் கொதித்த கொதி, தவித்த தவிப்பு! லேசான விஷயமா?

எழுதலாமா? ஆனால் ஆபத்து இருக்கிறதே. இதை எழுதியது தான்தான்: இது தனது கதைதான் என்று தெரிந்தால்? அம்மாடி!

ஆ. இங்கு பெண்கள் எழுதாமல் இருப்பதற்கு இதுவும் ஒரு காரணமல்லவா? ஒரு படைப்பு இந்தப் பெண்களின் சொந்தப் படைப்பாக இருந்தாலும் சரி, அல்லது பிற அனுபவங்களைக் கேட்டு அல்லது அனுமானித்து எழுதியிருந்தாலும் சரி, அவைகளைப் படித்துவிட்டு, 'ஐயையே. இப்படியெல்லாம் நடந்திருக்கிற அல்லது நினைக்கிற பெண்ணு இவள். சீச்சீ'என்று வாய் உதறுகிற ஒரு காலகட்டத்தில் பெண்கள் எப்படி உண்மைகளை எழுத முன்வர முடியும்?' இது. முன்னுரை எழுதியிருக்கிற இந்த எழுத்தாளருக்குத் தெரிந்திருக்குமா?

கீழே யிருந்து அம்மாவின் குரல் கேட்டது. அது கொஞ்சம் அசாதாரணமாக இருந்தது. "ஏ கலோசனு. ஜானகி, கொஞ்சம் கீழே வாங்க."

ஜானகி, இங்கிருந்தபடியே உரத்து 'ஏம்மா?' என்று கேட்டாள்.

"வா."

இவர்கள் இறங்கி வந்ததும் அம்மா கலோசனுவைப் பார்த்துச் சொன்னாள்: "டெலிபோன் வந்திருக்கு. நீ சொன்னயில்ல, மதுரையில ஒன் அண்ணனோட சிநேகிதன் வரதராஜன்னு அவன் பேசறான். இங்க அம்மா அப்பாவோட வந்திருக்கானும். நம்மவீட்டுக்கு எப்பிடி வர்றதுன்னு கேக்கறான்."

"நீ சொன்னியா?"

"எனக்கு அவ்வளவு தெரிஞ்சா நான் ஏன் இப்பிடி இருக்கேன். நான்தான் மெட்ராஸ் வந்து பதினஞ்சு வருஷமாகியும் இன்னம் ஒண்ணும் தெரியாத கூகையாதான இருக்கேன். எனக்கு வீடு இருக்கு. வேலை இருக்கு. ஆடிக்கொரு தடவ, அம்மாசிக்கொரு தடவ வெளிய கிளம்புறது ஒங்க பின்னாடியேவர்றேன். அப்புறம் என்ன தெரியும் இருங்க கலோசனுவ வரச் சொல்றேன்னு சொன்னேன்."

"அய்யய்யே அப்பிடியெல்லாம் இருந்தா சம்பந்தியம்மா நாடீகமில்லேன்னு திரும்பிப் போயிடப் போறாங்க" என்றாள் கலோசனு.

"என்னடி. சம்பந்தியம்மாவா?"

கலோசனு நாக்கைக் கடித்துக் கொண்டாள். திரும்பி அவளே கேட்டாள். "அதானே? அதென்னம்மா வாயில அப்பிடி வந்துடுச்சு?"

"எப்படி வந்துச்சுனு என்னையக் கேக்குறியா? ஒன்னையச் சொல்லிக் குத்தமில்லடி.. காலம் அப்பிடிப்பட்ட காலம். போயிப் பேசு."

மூவரும் தொலைபேசி இருந்த அறைக்குச் சென்று கொண்டிருந்தபோது ஜானகி, சும்மா அம்மாவின் வாயைக் கிண்டுவதற்காகக் கேட்டாள். "ஏம்மா அவ்வளவெல்லாம் தெரிஞ்சா நான் ஏன் இப்பிடி இருக்கேன்னு சொன்னியே, தெரிஞ்சிருந்தா எப்பிடி இருப்பே?"

திடீரென்று அம்மாவுக்கு எதனாலோ ஒரு அலாதியான உற்சாகம் கிளம்ப அவள் எடுப்பாக, "ஹலோ. வாங்க சம்பந்தி. ஜெண்டில்மேன், கமான்னு சொல்லி விருப்பேன்" என்றாள்.

பெண்கள் இருவரும் வாய் விட்டுச் சிரித்தார்கள்.

கலோசனு தனியாக மேஜையில் அம்மா வைத்திருந்த ரிசீவரை எடுத்தாள்.

"ஹலோ...நான் கலோசனு பேசறேன்."

''ஹலோ குட்மார்னிங் மேடம். நான் வரதராஜுலு.''

''குட் மார்னிங். நீங்க எங்க இருந்து பேசறீங்க?''

''இங்க எக்மோர்ல இருந்து பேசறேன்' நானு, மதர், ஃபாதர், ரெண்டு பிரண்ட்ஸ் எல்லாம் வந்திருக்கோம். ஒங்க வீட்டுக்குத் தான் வந்துக்கிட்டு இருக்கோம்.''

''அப்படிங்களா?''

''வெறும் அப்படிங்களா மட்டும்தானு? வெல்கம் டு மெட்ராஸ் இல்லியா?''

கலோசனு சுதாரித்துக் கொண்டு சொன்னாள்:'' வெல்கம் டு மெட்ராஸ் இல்ல. ஹார்ட்டி வெல்கம் டுதிஸ் புவர் காட்டேஜ்.''

''தேங்க்யூ. அண்ணன் இல்லியா?''

''இல்ல, ஸ்டேஷனுக்குப் போயிருக்காரு. நான் ஃபோன் பண்ணிச் சொல்றேன். நீங்க நேரா வாங்க.''

''வீட்டுக்கு எப்பிடி வரணும்?''

''அது ஒங்க இஷ்டம். ராஜாவாட்டம் வாங்க. அல்லது சீஃப் மினிஸ்டராட்டம் வாங்க.''

அவன் சிரித்தான்.

பிறகு இவள் தங்கள் பகுதியையும் அதில் கடந்து வரவேண்டிய இரண்டு திருப்பங்களையும் சொல்லி, ''இத, நீங்க டாக்ஸி டிரைவர் கிட்டச் சொல்லுங்க. அவுங்க சுலபமா வந்துடுவாங்க'' என்றாள்.

''ஓ.கே. மற்றவை நேரில்.''

''ஓ.கே.''

ரிசீவரை வைத்துவிட்டுச் சொன்னாள், ''அவரு, அவங்க அப்பா அம்மாவோட ரெண்டு பிரெண்ட்ஸ் வேறே வர்றாங்களாம்.''

''என்னடி இது திடீர்னு கும்பலா? ஒரு வேள நீ சொன்ன மாதிரிதான்இருக்குமோ?''

''என்ன சொன்ன மாதிரி?''

''பொண்ணு கிண்ணு பாக்க...''

'இருக்கலாம்' என்று நினைத்த கலோசனு அதை மடக்கிக் கொண்டு, மீண்டும் ரிசீவரை எடுத்து எண்களைச் சுழற்றினாள்.

''யாருக்கு?''

''அண்ணனுக்கு.''

அண்ணன் கால் மணி நேரத்தில் அவர்கள் வருவதற்குப் பத்து நிமிஷம் முன்பாகவே வந்து விட்டான். அவனுக்கு நண்பனின் வருகையில் அலாதி சந்தோஷம் என்பது தெரிந்தது. ''இவன் என்ன ஃபூல், பேரண்ட்ஸ் எல்லாம் கூட்டிக்கிட்டு வர்றவன், ஒரு லெட்டர் கூடப் போடாம வந்திருக்கான்'' என்று செல்லமாகக் குறைப் பட்டுக் கொண்டு, சாப்பாடு விஷயமாக யோசனைகளைக் கூறி இவர்களை விரட்ட ஆரம்பித்து விட்டான்.

அவர்கள் வருவதற்குள்ளாகவே வீடு பரபரப்பாகி விட்டது. பரபரப்போடு பரபரப்பாக அம்மா ''ஏ, கலோசனு, ஜானகி, ரெண்டு பேரும் மொகத்தைக் கழுவி ஒரு நல்ல சேலே எடுத்துக் கட்டிக்கிங்க'' என்று சொல்லவும் தவறவில்லே. தானும் சேலே மாற்றிக் கொண்டாள்.இதைக் கண்டு இந்தப் பெண்கள் புன்னகை செய்துகொண்டார்கள்.



அவர்: ''உங்க புதுப் பத்திரிகையிலே ஏன் தொடர் கதையே ஆரம்பிக்கலே?''
ஆசிரியர்: ''எழுத்தாளர்கள் எல்லாம் நாலு வாரம் பத்திரிகை தொடர்ந்து வரட்டும், அப்புறம் பார்க்கலாம் அப் படீன்னுட்டாங்க.'' - கே. ஆர். எம்.

அவர்கள் வந்ததும் ரொம்பத் தடபுடலாக வரவேற்றான் ரங்கையா.

''ஏய், என்னப்பா, எப்படி இருக்கே?'' என்று வாசலிலேயே நண்பனின் தோளைக் கட்டிக் கொண்டான்.

''வாங்க வாங்க.''

''வணக்கம்.''

''இவங்க நம்ம சொந்தக்காரங்க.''

''நமஸ்காரம்.''

''ராதா வரலியா?''

''அடுத்த லீவுக்கு வர்றதாச் சொல்லச் சொன்னு.''

''ஃபாதர்?''

''கிராமத்துக்குப் போயிருக்காரு.''

''இவதான் மூத்த பொண்ணு ஜானகி.''

''காப்பி எடுத்தாம்மா.''

''வேணும் வேணும். டாக்ஸி ஏர்றதுக்கு முன்னலதான் சாப்பிட்டோம்.''

''சும்மா இருக்கட்டும், கொண்டாம்மா.''

—சம்பிரதாயமான எல்லாம் அவை பாட்டிற்குப் போயின.

கலோசனுவுக்குப் பழையபடி வரதராஜுலுவைச் சாதாரண உடையில் பார்த்த போது, அட, இவர் இப்போதும் சீருடையில் வந்திருக்கலாமே என்று தோன்றியது. அப்புறம் அவளாக உள்ளுக்குள் சிரித்துக் கொண்டாள். அது சரிதான். அது நன்றாக இருக்கிறது என்பதற்காக இருபத்து நாலு மணி நேரமும் எந்த இடத்துக்குப் போனாலும் அதையே போட்டுக் கொண்டிருக்க முடியுமா?

மனம் மெல்ல ஓசை யில்லாமல் வேண்டாத பழசிலிருந்து கழற்றிக் கொண்டு அவள் உணர்வில்லாமலே வரதராஜுலு மேல் படர்ந்தது. இவளுக்கு இதுவும் முதல் காதல் போலவே சந்தோஷமாகத்தான் இருந்தது. (தொடரும்)

விடை :

**மேல் படத்தில் முதல் கட்டத்தில் மேல் வரிசையில் மூன்றாவது பொருள்**

# மாலை சூட்டி மகளுக்கு
# மண வாழ்த்தொலிக்க ஓலை தீட்ட வாரீர்
# உங்கள் தவம் பலிக்க...



வாழ்நாள் கனவுகள் பலிக்க...
வாச மல்லிகை வீசிட,
வாழைகட்டி உங்கள்
வாசலில் கொட்டுமேளம் வாசிக்க...

ஆசைச் செல்விக்கு இல்லற வாசல்
திறக்க...

வருகுதே நாளும் கோளும், வருகுதே
வரன் - -
கல்விமானும், கைநிறைவாய் நல்வருவாய்
காண்பவனும், நற்குடி மகனும்,
பெற்ற தாய்தந்தைக்கு
இணையாய்ப் பெண் மீது
பேரன்பு பொழிபவனும்...

எப்படி எங்கு தேடுவீர் அப்படி ஒருவரை !
ஏடு விரித்து அழைக்கின்றோம்
தேடிக்கொள்வீர் - - தேர்ந்த வரன் :
குலமும் கோத்திரமும்
உயர் குடும்ப நிலையும்,
படிப்பும் பணமும் பண்பும் ஏற்றமுறப்
பொருந்துமாறு - -

எடுத்த எடுப்பில் கிட்டும் - -
பல்லாயிரம் குடும்பங்கள் ஆதரித்த
பாதையிலே, உங்கள் செல்விக்கு - -
மனம்போல் மாங்கல்யம் ...

உளம்போல் தேர்ந்தெடுப்பீர்,
விளம்பர மேடை இதோ

**THE TIMES OF INDIA**
THE MATRIMONIAL COLUMNS
BOMBAY • DELHI • AHMEDABAD

டைம்ஸ் ஆஃப் இந்தியா திருமணப் பத்திகள்
'காலங்கள்' எல்லாம் சுபம் சுபம் சுபம் !

SIMOES/BC/MAT/ 5/81

## எவ்வளவு தெரியும்?

# அறிவியல் பற்றி

1. 'சாதாரண வருஷத்து தூமகேது' என்று மகாகவி பாரதியாரால் வரவேற்றுப் பாடப்பட்ட 'ஹாலியின் வால் நட்சத்திரம்' மறுபடி எப்போது தோன்றும்?
(அ) 1986 (ஆ) 1982 (இ) 2021 (ஈ) 1996

2. ராக்கெட் தத்துவத்தை முதன் முதலில் கண்டறிந்தவர்கள் யார்?
(அ) ரஷ்யர்கள் (ஆ) ஜெர்மானியர்கள் (இ) இந்தியர்கள் (ஈ) சீனர்கள்

3. பின்வரும் நான்கு இடங்களுள் ஒன்று விண்வெளி ஆராய்ச்சிக்குத் தொடர்பில்லாத இடம்.
(அ) தும்பா (ஆ) நைநிடால் (இ) கல்பாக்கம் (ஈ) ஸ்ரீஹரிகோட்டா

4. பூமிக்கு வெகு அருகில் உள்ள கிரகம் எது?
(அ) புதன் (ஆ) வெள்ளி (இ) வியாழன் (ஈ) செவ்வாய்

5. விண்வெளியில் அபரிமிதமாய்ப் பரவியுள்ளது எது?
(அ) ஹைடிரஜன் (ஆ) ஹீலியம் (இ) நைட்டிரஜன் (ஈ) ஆக்ஸிஜன்

6. முழு வளர்ச்சி யடைந்த ஓர் ஆணின் இதயம் 24 மணி நேரத்தில் 'பம்ப்' செய்து அனுப்புகிற இரத்தத்தின் அளவு எவ்வளவு?
(அ) 350 லிட்டர் (ஆ) 18000 லிட்டர்: (இ) 1000 லிட்டர் (ஈ) 15,000 லிட்டர்

7. மனித உடலின் வளர்ச்சி எத்தனை வயது வரை நீடிக்கிறது?
(அ) 50 (ஆ) 30 (இ) 40 (ஈ) 25

8. மதவாதிகளின் கட்டளைக்குப் பணிந்து தாம் கண்டறிந்த விஞ்ஞான உண்மைகள் தவறானவை என்று கூறிய அறிஞர் யார்?
(அ) ராண்ட்ஜன் (ஆ) கோபர்நிகஸ் (இ) கலிலியோ (ஈ) பெஞ்சமின் பிராங்க்லின்

9. ஒலி காற்றில் பயணம் செய்யும் வேகம் மணிக்கு எத்தனை தூரம்?
(அ) 1500 கி. மீ. (ஆ) 400 கி.மீ. (இ) 3000 கி. மீ. (ஈ) 1200 கி.மீ.

10. யானை, ஒரு நிமிடத்துக்கு எத்தனை முறை மூச்சு விடும்?
(அ) 50 முறை (ஆ) 100 முறை (இ) 10 முறை (ஈ) 30 முறை

அமைப்பு: **'யெஸ்பால்'**

விடைகள்:

1. அ. 1986 (பெப்ருவரி 9)
2. ஈ. சீனர்கள்
3. இ. கல்பாக்கம்
4. ஆ. வெள்ளி என்கிற வீனஸ்
5. அ. ஹைடிரஜன்
6. ஆ. 18,000 லிட்டர்
7. இ. 40 வயதுவரை
8. இ. கலிலியோ
9. ஈ. 1200 கி. மீ.
10. இ. 10 முறை.

10ம் சரியானால் அற்புதம். 6 முதல் 9 அருமை. 3 முதல் 5 மகிழ்ச்சி. அதற்கும் கீழே சோகம்.

''ஆபீஸ் காரங்க எல்லாம் மாப்பிள்ளை காதிலே என்னவோ மந்திரம் ஓதற மாதிரி கிசுகிசுனு சொல்றாங்களே, என்னது?''

''பையன் அத்தனை பேர் கிட்டேயும் 10, 20ன்னு கடன் வாங்கி இருக்கானாம். அதை அன்பளிப்பா வைச்சுக்க சொல்லி வெறும் கவரைக் குடுக்கறாங்க''

-குரு




# டிராமா

"என்னடா அம்பி, நிதானமா வர்றே
முதல் சீன்லே இருக்கறவன் இப்ப வந்தா
சரி...சரி... மேக் அப்புக்கு உட்காரு... மள
சீக்கிரம் பவுடர் போடுப்பா."

"இல்லே பாலா, வழியிலே ஸ்கூட்ட
தகராறு பண்ணிடுத்து."

"மாமனார் வாங்கிக் கொடுத்ததுதானே
அப்படித்தான் பண்ணும். ரங்கராஜன், ஏழ
வது சீனில் என்ன பண்ணணும் ஞாபக
இருக்கா? கரெக்டா டேப்பை ஆ
பண்ணு."

"இவன் சோடா புட்டி கண்ணாடிக்காரவ
ஆன் பண்றதுக்குப் பதிலா ரிவர்ஸ் பண்
வைப்பான். அப்படித்தான் அடுத்தா
அம்புஜம் டிராமாவிலே பண்ணிக் கழு
தறுத்தான்."

"வனிதாவாக இருக்கவே சொ
டயலாக்கைப் போட்டுச் சமாளித்தான்.
வாம்மா, உன்னைப் பத்தித்தான் பே
கிட்டு இருந்தோம். என்ன லேட்டா
றயே"

"விஜயாவிலே ஷூட்டிங் இருந்திச்சு
"அடி சக்கைன்னானும். ஸ்டாராயிட்டே
"ஒண்ணுமில்லே கணேஷ். கு
டான்ஸ்... உங்கிட்டே ஒண்ணு சொ
ணும்... நாலாவது சீன்லே 'கம்புக்கதி
பிடிங்கினாப்போல இருக்கும், தம்பிக்
பொண்ணு பேசினாப்பலே இருக்கும்' என்
வசனத்தை வுட்டுப்பிட்டறே. அப்புறம்
பாடு தகராறுப் போயிடுது."

"நீ ஒண்ணும் கவலைப்படாதே. வெனு
வாங்கிடறேன். கம்புக்குப் பொண்
பேசினாப்பல...."

"விஜயகுமார்..... இங்கே பார்ரே
கணேஷ் மிக்ஸி கணக்கா டயலாக்கே
போட்டுக் குழப்பறான்."

"விஜயகுமாரைக் கூப்பிடறயா? அ
செங்கல்பட்டிலே போட்டப்ப '
போஸ்ட்' என்கிற இரண்டு வார்த்தை
னத்தை 'சார், பேஸ்ட்' என்று சொன்
தெரியாதா?"

" 'சார் வேஸ்ட்'னு சொல்லலையே அ
பாரு."

"செகரட்டரி சார்... இப்படி வயத்தி
அடிக்கிறீங்களே. கணக்கா இருபதே ப
கொடுத்தால் எப்படி?"

"ஹால் சின்னது. அதனால்தான் ரெ
ரிக்ட் பண்ண வேண்டி இருக்கு. நெக்




டயலாக்: அகஸ்தி

# க்கப் ரூம்

டம் ராணி சீதையிலே வெக்கறேன். ராளமாத் தர்றேன்.''

''டேய் வெங்கடேசன் நல்ல மனுஷர்டா. டுத்த தடவை தருவாரு. பாவம், அவரைத் லைக்காதே.''

''மணி... ஃபேட்டா மேக்கப் போடு... ன்னுலே போலீஸ்காரனு வேற வராரு மாகன்.''

''சரி சார்... ஸ்பிரிட் கம் தீர்ந்துடுச்சு. ரு புட்டி அர்ஜண்டா வாங்கி வரணும்.''

''நாராயணன், உன் ஸ்கூட்டரில் போய் ரு புட்டி ஸ்பிரிட் கம் வாங்கிண்டு வா... வெறும் ஸ்பிரிட் வாங்கிண்டு வரப்போறே... ம்ப கிச்சா உறிஞ்சிப்புடுவான்.''

''வாய்யா ராஜேந்திரன்... நேத்து எப் படி இருந்தது கலைவாணர் அரங்கத்திலே?''

''ஐய்யோ அதை ஏன் கேட்கறே? அந்த ந்தர் குரூப் டிராமாவா போட்றாங்க? படு பேத்தல் கதை. அவனவன் பூந்து விளை பாடறான். இந்த அழகிலே அம்பது வாட்டி. போட்டுட்டாங்க...''

''என்ன நாகராஜன் சார், மணி ஆகறது. போண்டா, காப்பி வர்ற திசையே தெரியலே''

''வல்லபன், அரக்கோணத்திலே என் னமோ நம்ப பிளே ஏற்பாடு பண்றேன்னு சொன்னீங்க..... அப்புறம் மூச்சையே காணோம்.''

''அது வந்து.... அது வந்து....''

''சீக்கிரம் வாய்யா... அரக்கோணத்தி லேயே நின்னுக்கிட்டு இருக்கே.''

''என்ன பாலா, நீ என்னமோ டில்லி யிலே கொடி பறக்க விட்டேன்னு பேசிக் கிறே. நம்ப குரூப்பிற்கு ஒரு சான்ஸ் பிடிக் கக் கூடாதா?''

''டில்லி என்னடா பெரிய சீமையா? டில்லி யிலே இருக்கிறவங்க என்னமோ ஆகாசத்தி லேர்ந்து இறங்கி வந்தவங்க மாதிரி, ''மெட் ராஸ் பிளே எல்லாம் அபத்தமாக இருக் கு''ன்னு சொல்வாங்க... வாங்கம்மா. டேய் சீனு, நம்ப விசாலம் அம்மாவுக்கு ரெண்டு பாஸ் கொடு.''

''பாஸ்... எல்லாரும் பாஸ் கேட்டா நான் என்ன செய்வேன், பாஸ்!''

''விஷயம் தெரியுமா, வைத்தி, ஒரு கிசுகிசு. அந்த ட்ராமா 'முதுகிலே டின்' னில் ஆக்ட் பண்ண ஹீரோயின் நளினாவுக்கும்....''









''பெண் படிச்சுட்டு சும்மா இருப்பாளேன்னு சர்வீஸ் கமிஷன் எழுதச் சொன்னேன். முருகன் கிருபையிலே முதல் தடவையிலேயே பாஸாயிடுத்து. மெட்ராஸிலே வேலைன்னதும் வேண்டாமோன்னு கொஞ்சம் யோசிச்சேன். அக்கம் பக்கத்திலே இருக்கிறவாதான் ரொம்ப நிர்ப்பந்தப் படுத்தி எப்படியாவது அவளை வேலைக்கு அனுப்பும்படி சொன்னா. ஹாஸ்டல்லே தங்கி வேலைக்குப் போயிண்டு இருக்கிறாள். பட்டிக்காட்டுப் பொண்ணாச்சேன்னு பார்க்காதேள்! உங்களைப் போல பட்டணத்து நாகரிகத்திலே பழகினவள்தான் எங்க இந்துவும்! எப்போ பெண் பார்க்க வரேள்?''

முதல் நாள் பெண்ணின் புகைப்படத்தையும் அவள் ஜாதகத்தையும் சேர்த்தே கொண்டு வந்து கொடுத்துவிட்டு, தன் வீட்டில் பெற்றோருடன் பேசிக் கொண்டிருந்த சிவராம குருக்களைப் பார்த்தபோதே ஓரளவுக்கு விவரம் விளங்கி விட்டது ரங்கசுவாமிக்கு.

அப்போதுதான் ஆபீஸில் இருந்து வீட்டுக்குத் திரும்பி இருந்தான் அவன்.

''பையன் வாட்ட சாட்டமாக, ராஜா போலத்தான் இருக்கிறான். இந்துவுக்குச் சரியான ஜோடிதான்'' என்று பலவாறாக மனக் கணக்குகள் போட்டார் குருக்கள்.

உண்மையில் ரங்கசாமி நல்ல அழகுதான். நல்ல சிவப்பும்கூட! அவருக்கு ரங்கஸ்வாமியை மிகவும் பிடித்து விட்டது.



# கற்பு கடைச்சரக்கல்ல!

## அரவிந்தன்



ரங்கஸ்வாமிக்கு போட்டோவில் பார்த்த இந்துவின் உருவம் நிஜமாகவே நிறையப் பிடித்துப் போயிருந்தாலும் அவனால் உடனடியாக எந்தத் தீர்மானத்துக்கும் வர முடியவில்லை.

தன் கல்யாண விஷயமாகவும் தன் அருமை நண்பனும், ஆபீஸில் அவனுடன் பணியாற்றுகிறவனுமான தியாகுவிடம் கேட்ட ரங்காவுக்கு எடுத்த எடுப்பிலேயே ''இது எல்லாம் சரிப்பட்டு வராது ரங்கா. வேலைக்குப் போற பெண் — அதுவும் நம்ம பட்டணத்திலே வேலை பார்க்கிற பெண், நிச்சயம் உனக்கும் எனக்கும் சரிப்பட்டு வராது! அதுஅது சம்பாதிக்கிற திமிரில் எப்படியெல்லாம் வர்றது? யாரையும் லட்சியம் இல்லாம எப்படியெல்லாம் எடுத்து எறிஞ்சு பேசுகிறது? — எல்லாம் பார்த்துக் கொண்டுதானே இருக்கிறாய்? — இதையெல்லாம்விட, ஹாஸ்டல்லே இருக்கிற பெண் என்று வேறே சொல்கிறாய்! ஹாஸ்டல்



பெண்களைப் பத்தி ஆயிரம் ஆயிரம் கதைகள் எனக்குத் தெரியும். நீயும் நானும் பேசிக்கிட்டு இருக்கிற இந்த நிமிஷத்திலே அந்தப் பெண் எந்த ஹோட்டல்லே — அல்லது எந்தத் தியேட்டர்லே அல்லது எந்த லாட்ஜிலே எவன் கூட இருக்கிறாளோ? இந்த வம்பெல்லாம் நமக்கு வேணுமப்பா. பேசாமல் வீட்டோட இருக்கிற பெண்ணைப் பார்க்கச் சொல். குடும்பத்துக்கு அடங்கி யிருப்பாள். போயும் போயும் உன் அப்பா அம்மாவுக்கு ஏன் இப்படியெல்லாம் ஆசை?....'' என்று வெட்டு ஒன்று துண்டு இரண்டாகச் சொல்லிவிட்டான் தியாகு!

தியாகு வெறும் ஊருக்கு உபதேசியல்ல!

அவனுக்கு அடுத்த வாரம் கல்யாணம் நடக்க இருந்தது. அவன் சொன்னது போலவே — சுத்தமான — பட்டிக்காடான— அவனுடைய சொந்த ஊரில் — வீட்டை விட்டு வெளியே போய் அறியாத பெண்ணைப் பார்த்துத்தான் சம்மதம் சொல்லிவிட்டு வந் திருந்தான் தியாகு!

தியாகுவின் எச்சரிக்கை அவ்வப்போது அவன் மூளைக்குள் சிவப்பு விளக்கு போட்டு அவன் நினைவை ஆங்காங்கே தடை செய்து கொண்டிருந்தது.

எவ்வளவு யோசித்தும் ஒரு முடிவுக்கும் வர முடியாமலேயே உறங்கிப் போனான்.

'எப்படியும் பெண் ஏதோ டெஸ்ட் எழுதுகிறாள் என்று இரண்டு மாதம் வாய்தா கேட்டுவிட்டுப் போயிருக்கிறார் இந்துவின் அப்பா. அபிப்பிராயத்தைச் சொல்ல உடனடியாக அவசரம் ஒன்றும் இருக்காது. கொஞ்ச நாட்கள் இதை இப்படியே ஆறப் போட்டுப் -பிறகு நிதானமாக ஒரு முடிவு எடுக்கலாம்!' என்று தனக்குள்ளாகவே எண்ணிக் கொண்டு ஒரு வழியாக சமாதானம் அடையத்தான் அவனால் முடிந்தது அப் போதைக்கு.

தியாகுவின் கல்யாணத்துக்குப் போய் வந்ததில் சில தினங்களும் அதன் பிறகு பத்து நாட்களில் தியாகு திரும்பவும் வேலைக்குச் சேர்ந்து தன்னுடைய மண வாழ்க்கையின் அனுபவங்களையும், தங்கள் இனிமையான தேன் நிலவையும் பற்றி சுவாரசியமாகச் சொல்வதைக் கேட்டதில் மேலும் ஒரு வாரமும் ஓடியது.

அன்று

தியாகுவைப் பார்க்கவே என்னவோபோல இருந்தான். முகத்தில் பழைய களையும், துள்ளலும் சிரிப்பும் எதுவும் இல்லை. தாடியும் மீசையுமாக அவனைப் பார்க்கவே சகிக்கவில்லை.

தூண்டித் துருவி ரங்கசுவாமி கேட்ட பிறகு அவனது கவலைக்கான காரணம் புரிந்தது.

தியாகு ஏதும் பேசாமல் தன் கையில் நாலாய் எட்டாய் மடித்து வைத்திருந்த அந்தச் சிறிய கடிதத்தை எடுத்துக் காட்டினான்.

தியாகுவின் மனைவி குடியிருந்த அந்தக் கிராமத்தில் அவள் வசித்த அதே தெருவில் தான் அந்தக் கடிதத்தை எழுதியவனும்

வசித்திருக்கிறான் என்பதும், அவனுக்கு அகிலாவின் மீது ஆசை இருந்ததும், அதற்கு அகிலாவின் மறைமுகமான சம்மதம் இருந்ததும் அவசரம் அவசரமாக அவள் வீட்டில் நிச்சயித்த கல்யாணமும்—அவனுடைய வேலையற்ற ஏழ்மை நிலையுமாக அந்தச் சிறிய காதல் முளையிலேயே கருகி விட்டதும் எல்லாமே அந்தக் கடிதத்தில் நன்றாகப் புரிந்தது.

''சின்ன வயதில் இதெல்லாம் சகஜம். இப்படி ஒன்று இன்றைய ஆணுக்கும் பெண்ணுக்கும் இல்லாதிருந்தால்தான் அதிசயம். இன்னமும் அகிலா களங்கமற்றவளே! வெறும் பார்வைகளும் ஒரு காதலின் அங்கீகரிப்புமே அவளைக் களங்கப்படுத்திவிடாது. அவள் நல்லவளே. இதை ஒரு குழந்தை விளையாட்டாக எண்ணி மறந்துவிடு!'' என்று பலவிதமாக அவன் தியாகுவுக்குப் புத்தி சொன்னான்.

அப்போதெல்லாம் மனத்தின் ஒரு மூலையில்—

''பட்டணத்துப் பெண்ணை யெல்லாம் நம்ப முடியாது என்று பட்டிக்காட்டு கிராமத்துக்குப் போனாயே.... இப்போது என்ன ஆயிற்று பார்த்தாயா?'' என்று ஆக்ரோஷமான கேள்வி ஒன்று எழுந்து எழுந்து அடங்கியது.

ஏற்கனவே நொந்து போயிருக்கும் என் நண்பனை மேலும் நோகச் செய்துவிடக் கூடாதென்று ரங்கா மௌனமாகவே இருந்தான்.

அன்று மாலை ஆபீஸ் முடிந்து பஸ்ஸில் வீடு திரும்பிக் கொண்டிருந்தான் ரங்கா. பயணம் செய்துகொண்டிருந்த அனைவருடைய கவனத்தையும் ஒருசேரக்கவர்ந்தது அந்தக் கீச்சுக் குரல்.

''ஆ.... ராஸ்கல்!... நானும் ரொம்ப நேரமாப்பொறுத்துப் பொறுத்துப் பார்த்துக்கிட்டே வர்றேன் — மேலே மோதறே; கம்பியைப் பிடிக்கிற சாக்கிலே கையைப் பிடிக்கிறே — வேணும்னே மேலே மேலே இடிக்கிறே — உன் மனசிலே என்னன்னு நினைச்சுக்கிட்டு இருக்கிறே? பெரியஹீரோன்னு நினைப்போ? பல்லு முப்பத்திரண்டும் கொட்டிப் போயிடும். என்கிட்ட இந்த விளையாட்டெல்லாம் வச்சுக்காதே! ஸ்டுபிட்—நகர்ந்து போடா....!''

பஸ்ஸின் வேகத்தையே ஸ்தம்பிக்கச் செய்தது அந்தப் பெண்ணின் குரல்.

அவளைத் தொடர்ந்து ஓர் ஆண் குரல் —

''பஸ்ஸில் வந்தா நாலும்தான் இருக்கும். அப்படி உனக்கு அசௌகரியமா இருந்தா டாக்ஸியிலே போறதுதானே? இங்கே வந்தா அப்படித்தான் நடக்கும்'' என்றது.

''எங்கே இன்னொரு தரம் தொடு பார்க்கலாம்.''

''ம்....தொட்டேன். என்னடீ பண்ணுவே?''

அடுத்த கணம்—

'பட்பட்'டென்று அடிபடும் சத்தமும், அதைத் தொடர்ந்து ஓர் இளைஞன் தலைவிரி கோலமாக பஸ்ஸில் இருந்து இறங்கி ஓடுவதும் தெரிந்தது.

''ப்ளடி ஸ்கவுண்ட்ரல் என்கிட்டயா விளையாடிப் பாக்கறே?''

ஆத்திரத்துடன் கத்தியபடி கையில் இருந்த செருப்பைக் கீழே போட்டு நிதானமாகக் காலில் மாட்டிக் கொண்டு தலை நிமிர்ந்தாள் அந்தப் பெண்.

கூட்டத்தில் முண்டியடித்துக் கொண்டு முன்னேறி ரங்கா அந்தப் பெண்ணைப் பார்த்தான்.

சட்டென்று அவனுக்குப் பொறி தட்டினாற் போலிருந்தது.

''இந்து....''

ஒரு கணம் அவன் நினைவுகள் அப்படியே ஸ்தம்பித்துப் போய் நின்றன. அடுத்து, அவன் மனம் நின்று நிதானமாக ஒரு கணம் யோசித்தது. தியாகு கூறியவை அத்தனையுமே அவன் நினைவுக்கு வந்தன.

'வீட்டுக்கு வெளியே வந்துவிட்ட எவளும் யோக்கியமில்லை. யாரையும் நம்பக் கூடாது.

'வீட்டுக்கு உள்ளே இருப்பவளெல்லாம் யோக்கியம்தான் என்பதற்கு என்ன உத்தரவாதம்?' என்று ரங்காவின் மனம் அவனையே கேட்டது.

உண்மைதான்.

கற்பு—

கடைவீதியில் இல்லை!—

அது—

மனத்தில் இருக்கிறது.

ரங்கா இதை வாய்விட்டே கூறினான்.

அன்று இரவு—

இவ்வளவு நாளும் தன் கல்யாணத்தைப் பற்றிப் பேச்சை எடுத்தாலே பதில் சொல்லாமல் தட்டிக் கழித்த தங்கள் பிள்ளை அன்றைக்குத் தானாகவே பேச்சை எடுத்ததோடு துணிந்து தைரியமாக ''எனக்கு அந்தப் பெண் இந்துவையே முடித்து விடுங்கள்'' என்று கூறியதைக் கேட்டு அவன் பெற்றோர் ஆச்சரியத்தில் வாயடைத்துப் போய் நின்றிருந்தார்கள்.

பத்திரிகை ஆசிரியர்: ''ஜீவன்னு ஒரு புது பத்திரிகை வந்து தொலைஞ்சதாலே நம்ம 'மனிதன்' பத்திரிகை விற்பனை ரொம்ப குறைஞ்சு போயிடுச்சு!''

மனைவி: ''இதுக்குத்தான் ஏகப்பட்ட பத்திரிகை ஆரம்பிக்காதிங்கன்னு சொன்னேன், கேட்டீங்களா? கடைசியா நீங்க ஆரம்பிச்ச பத்திரிகை பேருதான் ஜீவன்!''

-ஆர். கண்ணன்



# அன்றலர்ந்த பனிமலராய் உங்கள் அழகு சிரிக்கிறது...





செந்தாமரையான அழகு சிரித்திட
சொந்தமுடன் முகத்தில் பூசுவீர் லாக்டோ-காலமைன் ப்ளஸ்
புலரும் காலையில் பனித்துளி பட்டு
மலரும் பன்னீர்ப்பூவாய் மாறும் முகமெனும் மொட்டு
துவண்ட மேனியை அன்புடன் துடித் தெழச் செய்யும் அதிசயம்
உவமையில்லா லாக்டோ-காலமைன் ப்ளஸ்ஸின் ரகசியம்
அதன்... ஆலன்டைன் அளிக்குது இளமையின் மென்மை
வைட்டமின் ஈ வளமுடன் தருகுது பனித்துளியின் புதுமை
விட்ச்ஸ்ஹேஸல் எனும் அஸ்ட்ரின்ஜென்ட் மேனியில்
செய்திடும் நன்மை.

இங்கிதமாய் பூசுவீர் லக்டோ-காலமைன் ப்ளஸ் அனுதினம்
மங்காத இளமை எழிலுக்கோர் வரப் பிரசாதம்.

## லாக்டோ-காலமைன் ப்ளஸ்

டுபோர்–இன்டர்:ப்ரான் லிட் (காஸ்மெடிக்ஸ் டிவிஷன்)

## மேனிக்கு அளிப்பீர் மென்னெழில்!

Sista's-DIL-693-81 I Tam

# Wake up.
# The times have changed.

## New Philips Quartz Control Clock Radio




It's a marvel of technology and thoughtfulness. Set it on 'slumber' and drop off to sleep, and it switches off. Automatically. And it wakes you up with music, news, or a 'buzz'. Touch 'snooze', and it lets you sleep 10 minutes longer.

A powerful two-band radio. Or an accurate quartz clock that switches over automatically to 'battery' when mains fail.

Anyway you look at it, it's a winner.

## From Philips, the trusted Indian household name for over fifty years.




**PHILIPS**

Peico Electronics & Electricals Limited

CASPR-851-203

# மாதம் ஒரு புத்தகம்








ஜனவரி மாதம் பிரசுரமான புத்தகங்களுள் சிறந்தது:

**க**ம்பனின் சந்தம்; பாரதியின் துடிப்பு; கவிமணியின் எளிமை — மூன்றும் ஒருங்கே இணைந்த கவிதைகளுக்கு ஓர் உருவம்—இயேசு காவியம்; கவியரசு படைத்தது.

ஒரு சான்று பார்க்கலாமே? 'இவள் விப சாரி; கல்லால் அடியுங்கள்' என்று ஒரு பெண்ணை இயேசுநாதர் முன் கொண்டு நிறுத் தப்பட்ட சமயம் என்ன நிகழ்கிறது?

''யாவர் கைகள் பாவமி லாதவோ
யாவர் உள்ளம் பாரமிலாததோ
நீவிர் அந்த முதற்பெருங் கல்லையே
பாவை மீதிற் படிய எறிவீரே!''
இயேசு சொல்லி அமைதியில் ஆழ்ந்தனர்
ஓசையின்றித் தரையில் எழுதினர்.
கூசுகின்ற மனத்தினர் யாவரும்
வீசு கல்லைவிட் டோடினர் தாமரோ!''

குற்றாலச் சாரலில் குளுமையான சூழ் நிலையில் இப்படைப்பு துவங்கப்பட்டதாலோ என்னவோ அருவி போலத் தங்கு தடை யின்றி வார்த்தைகள் எளிய நடையில் பிர வகித்து ஓடுகின்றன. புகழ் பெற்ற மலைப் பிரசங்கத்திலிருந்து ஒரு பகுதி:

''சொல்லுவது மட்டுமல உபதே சங்கள்
சொல்பவனும் நடப்பதுதான் உயர்நியா
யங்கள்
நல்லவற்றைப் பிறர்கேட்கச் சொல்லி விட்டு
நான்மட்டும் மறந்துவிட்டால் நியாய
மென்ன?
எல்லோர்க்கும் கிடைப்பதில்லை மோட்ச
லோகம்
இயம்புவதைக் கடைப்பிடிப்பான் நேரே
செல்வான்
சொல்லுகிறேன் கேளுங்கள்! அதன்பின்
நானும்
சொன்னபடி வாழுகிறேன்'' என்றார்
இயேசு.''

செவ்வாக்கியரின் நயமான பேச்சுப்பாணி ஓர் இடத்தில் தென்படுவது ஆச்சரியம்:

''ஒருவன்தன்னை மதத்தில் சேர்க்க
ஓடியாடி அலைகிறீர்!
ஓடி வந்த மனிதனுக்கு
உண்மை என்ன சொல்கிறீர்?
இருமடங்கு நரகந்தன்னில்
இட்டுக் கொண்டு சேர்க்கிறீர்
இந்த வேலை செய்துகொண்டு
என்ன வேதம் படிக்கிறீர்?''

மாட்டுத் தொழுவத்தில் இயேசு நாதர் பிறந்ததிலிருந்து இறுதியில் சிலுவையில் அறையப்படும்வரை பல இடங்களில் கவிஞரின் பேனா துள்ளி விளையாடுகிறது. இந்தக் காவியப் படைப்பு கிறிஸ்துவ அறிஞர் குழுவின் ஒப்புதல் பெற்று ஜூன் 1981ல் தயார் ஆகியதாம். குழுவின் திருத்தங்களை ஏற்றுக் கவிஞர் சில மாற்றங்களைக்கூடச் செய்திருக்கிறாராம்.

''இறவாக் காவியம் ஏசு காவியம்தான்'' என்று தன்னுரையில் கண்ணதாசன் கூறி யிருக்கிறார். தாராளமாய் ஆமோதிக்கலாம்.

—தமயந்தி

இயேசு காவியம்
கலைக் காவிரி, 18 பென்வெல்ஸ் ரோடு, திருச்சி-1
விலை ரூ. 25-00

ஜனவரி மாத வெளியீடாக எமக்குக் கிடைத்த பிற புத்தகங்கள்:

1. சித்த மருத்துவ அமுது
சித்த மருத்துவ நூல் ஆராய்ச்சி நிலையம், ஈ-32 அண்ணா நகர் (கிழக்கு) சென்னை-600 102
விலை ரூ. 5-00

2. ஐயப்பனின் அற்புதங்கள்
புலவர் நாகசண்முகம், ஸ்டார் பிரசுரம், சென்னை-600 005 விலை ரூ. 5-00

3. இது முதல் அத்தியாயம் (நாவல்)
கார்த்திகா ராஜ்குமார், ரூ. 10-00 பூக்கூடை பதிப் பகம், த. பெ. எண். 501, சென்னை-600 003



**பஜனை செய்யும் ஸ்டிரைக்!**

உத்திரப்பிரதேச மின்வாரிய ஊழியர்கள் தங்கள் கோரிக்கைகளைவற்புறுத்திப் புதுவிதமான போராட்டம் செய்தனர்!

இவர்கள் தங்களுடைய ஆபீசின் முன்பு ஆயிரக்கணக்கில் குழுமி, கீதை, பைபிள், குரான் ஆகியவற்றிலிருந்து பல பகுதிகளை படித்தார்கள்! அதிகாரிகளுக்கு, இவையாவது நல்ல புத்தி தந்து, தங்கள் கோரிக்கையை நிறைவேற்றட்டும் என்பது இவர்கள் வாதம்!

- சம்பத்குமாரி

ஆதாரம்: ஸண்டே

## இலக்கியத்தில் இறையுணர்வு

# புத்தம் சரணம் கச்சாமி

கீரன்.

**கா**லத்தாலும் கருத்தாலும் சிலப்பதிகாரத்துடன் தொடர்புடையமணிமேகலைதமிழுக்கு அமைந்த ஒரு கருவூலம். சீத்தலைச் சாத்தனார் இயற்றிய இந்நூல் நமக்குப் பல புதிய செய்திகளைத் தெரிவிக்கிறது.

''மணிமேகலையை அவரவர் தத்தம் நுண்ணறிவுக்கேற்ற அளவில்தான் உணர்ந்து கொள்ள முடியும்'' என்று துறைசைமங்கலம் சிவப்பிரகாசர் ''வெங்கைக் கோவை'' என்ற நூலில் கூறியுள்ளார்.

கோவலனுக்கும் மாதவிக்கும் பிறந்த மகள் மணிமேகலையைக் காவிய நாயகியாகக் கொண்டு இந்நூல் இறையுணர்வையும், சமயக் கருத்துக்களையும், பலவிதமான அறங்களையும் கொட்டுகிறது.

காருண்யத்தைப் பூண்ட ஒப்பற்ற தலைவன் புத்தன் என்பதை 'அருளறம் பூண்ட ஒரு பெரும் பூட்கை' என மணிமேகலை கூறுகிறது. கீத கோவிந்தத்தில் திருமாலின் தசாவதாரத்தை எடுத்துச் சொல்லும் ''வேதா நுத்தரத்தே'' என்னும் சுலோகத்தில் பௌத்தாவதாரத்தின் பெருமையைப் பற்றி ''காருண்யமா தந்வதே'' என்று ஜயதேவர் பாராட்டியுள்ளார்.

கிரஹங்களின் நிலையைப் பார்த்து அரசாட்சி இருக்குமா இருக்காதா என்று சோதிடம் சொல்ல வேண்டாம். ஏனெனில் கிரகங்கள் மாறுவதால் அரசாங்கம் ஆட்டம் காண்பதில்லை: அரசாட்சி ஆட்டம் காண்பதால் கிரஹங்கள் மாறுகின்றன. அதாவது தருமத்திலிருந்து அரசு மாறுபட்டால் கிரஹங்கள் திரியும் என்கிறது மணிமேகலை.

''கோள்நிலை திரிந்திடில் கோள்நிலை திரியும்
கோள்நிலை திரிந்திடில் மாரி வறங்கூரும்
மாரி வறங்கூரின் மன்னுயிர் இல்லை''



நாம் பொதுவாகப் புத்தர் என்றதும் கௌதம புத்தரைத்தான் நினைவுபடுத்திக் கொள்வோம். ஆனால் கௌதம புத்தருடைய காலத்துக்கு முன்பு, தருமம் குறைந்த ஒவ்வொரு காலத்தும் ஒவ்வொருவராகப் புத்தர்கள் பலர் அவதரித்துத் தருமத்தை நிலைநிறுத்தினர். இக்கருத்தை மணிமேகலை,

''இறந்த காலத்து எண்ணில் புத்தர்களும்
சிறந்து அருள்கூர்ந்து திருவாய் மொழிந்த
தீர் அறி பொருள்.....''
என்று கூறுகிறது.

புத்தரையும், அவர் தருமத்தையும், அவர் கொள்கையை ஏற்றுக் கொண்ட பிட்சுக்கள் கூட்டமாகிய சங்கத்தையும் 'புத்தம் தன்மம் சங்கம்' என்ற ஒரு தொடரால் குறிப்பிடுவது வழக்கம். இம்மூன்றையும் 'முத்திறமணி' என்ற சொல்லால் மணிமேகலை குறிக்கிறது. இந்த முத்திற மணியை மும்முறை வணங்க வேண்டும் என்று பௌத்த தருமம் கூறுகிறது. மும்முறை வணங்குவதாவது.

'புத்தம் சரணம் கச்சாமி
தர்மம் சரணம் கச்சாமி
சங்கம் சரணம் கச்சாமி'

என மூன்று முறை ஜபித்து மூன்று முறை வணங்குவது.

பசுவைத் தெய்வமாகக் கருதுவது பல மதத்தினருக்கும் பொது மரபு. பகுத்தறிவு பெற்ற மனிதன் பசுவைப் போற்றியே தீரவேண்டும். அது என்றும் மூட நம்பிக்கை அல்ல. தான் சவலைப் பிள்ளையாகித் தாய்க்குப் பால் இல்லாத காலத்தில் தன்னை வளர்த்த பசுவை வணங்குவது மூட நம்பிக்கையா? பசுவின் பெருமையைச் சிறப்பாகக் கூறுவது மணிமேகலை.

''மேய்வதற்காகவே விடப்பட்ட நிலத்தில் தோன்றிய புல்லை அருந்தி, இவ்வுலக மக்களுக்கு எல்லாம், பிறந்த நாள் முதலாகச் சிறந்த பால் தரும் பசு அறமும் அருளும் உடையது'' என மணிமேகலை கூறுகிறது.

''விடுநில மருங்கில் படுபுல் ஆர்ந்து
நெடுநில மருங்கில் மக்கட்கு எல்லாம்
பிறந்தநாள் தொட்டுச் சிறந்ததன் தீம்பால்
அறந்தரு நெஞ்சோடு அருள்சுரந்து ஊட்டும்''

தீவினை, நல்வினை என்பன யாவை?

கொலை, களவு, காமம் என உடலால் தோன்றும் மூன்று குற்றங்களையும் பொய், கோள் சொல்லல், கடுஞ்சொல், பயனற்றவை பேசல் எனச் சொல்லால் தோன்றும் நான்கு குற்றங்களையும், பொறாமை, கோபம், மாறுபட உணர்தல் என்று உள்ளத்தால் தோன்றும் மூன்று குற்றங்களையும் செய்தல், தீவினைச் செயல்.

சீலம் தாங்கி, தானம் செய்து, மேலவரை விரும்புதல் நல்வினைச் செயல்,



தாமோதரனுக்குத் திடீரென்று விழிப்புக் கொடுத்து விட்டது. கட்டிலை விட்டு மெல்ல இறங்கிக் கூடத்துக்குப் போய்ச் சுவர்க் கடிகாரத்தில் மணி பார்த்தபோது இரண்டடிக்கப் பத்து நிமிடங்கள் இருந்தது அவரது வியப்பை அதிகமாக்கிற்று.

எத்தனையோ கட்டங்களில் கல் நெஞ்சுக்காரன், உணர்ச்சிகள் இல்லாதவன் என்றெல்லாம் ஏனையோரால் மட்டுமின்றித் தம் சொந்தக் குடும்பத்தினராலேயே கூட பழிக்கப்பட்டு வந்துள்ள அவர், தமது இரவு நேர அவஸ்தைகள் அவர்களுக்குத் தெரிய வந்தால் அவர்கள் என்ன நினைப்பார்கள் என்று சில கணங்களில் நினைத்துப் பார்த்தார்.

அவர் மறுபடியும் கட்டிலை விட்டு இறங்கிச் சமையலறைக்குச் சென்று தண்ணீர் குடித்து விட்டு வெளியே வந்தபோது லலிதா எதிர்ப்பட்டாள்.

''என்ன, தூக்கம் வரலையா?'' என்றாள்.

உண்மையை ஒப்புக்கொள்ள அவரது தன்முனைப்பு இடம் கொடுக்காதபோதிலும் மனைவியின் பார்வையில் புலப்பட்ட கவலை கலந்த அச்சம் அவரது அகந்தையைச் சிதைக்கவே, ''ஆமாம்'' என்ற ஒரே சொல்லால் உண்மையை ஒப்புக் கொண்டார். தம்மைக் காட்டிலும் அவளே அதிகக் கவலைக்கும், வருங்காலம் பற்றிய பயங்களுக்கும் ஆளாகி மறுகிக் கொண்டிருப்பவள் என்ற உண்மை தமது எரிச்சலைத் தணித்ததைப் புரிந்து கொண்டு அவர் அவளைக் கடந்து செல்ல முற்பட்டபோது, ''...நானும் பார்த்துண்டுதான் இருக்கேன். ரெண்டு மூணு மாசமாவே நீங்க சரியாத் தூங்கறதில்லே. பெறண்டு பெறண்டு படுக்கறேள். அடிக்கடி பெருமூச்சு விடறேள்....'' என்று அவள் தொடர்ந்தாள்.

''ஏன்னா, பென்ஷன் எவ்வளவு வரும்?''

அவர் நின்று திரும்பிப் பார்த்து ''அதுக்கு இதுவா நேரம்? போய்ப் படு பேசாமல்'' என்றார்.

அவள் நிறுத்தாமல், ''ஆயிரமாவது வருமா?'' என்றாள்.

# “மெமோ”தரன்!



ஜோதிர்லதா கிரிஜா

இரவின் அமைதியில் அவர் இலேசாகச் சிரித்த சிரிப்பு இரைச்சலாக ஒலித்தது.

''அறுநூறு வரும்!''

''அறுநூறு வச்சுண்டு எப்படி வாழப் போறோம்?''

''அறுபதை வச்சுண்டு வாழறவாளும் இருக்காடி நம் நாட்டுலே! போய்ப் படு. ஏதாவது வழி பிறக்கும். நரசிம்மனுக்குக் கூடிய சீக்கிரம் ஏதானும் வேலை கிடைக்கும். என்னோட நஷ்டத்தை அவன் ஈடுகட்டி விடுவான்.... போ போ அழாதே!''

மறுநாள் வழக்கம்போல் அவர் அலுவலகத்துக்குள் நுழைந்தபோது மணி 9.40. வழக்கமாகத் தென்படுகிற ஓரிரு தலைகளைத் தவிர அலுவலகம் ஆளரவமற்றிருந்தது.

ஒன்பதரைக்கெல்லாம் வந்து மேசை, தொலைபேசி முதலியவற்றைத் தூசி தட்டித் துடைத்து அவருக்குக் கதவு திறக்கும் மாதவன் வந்திருக்கவில்லை. சன்னல் கதவைத் திறந்து, மேசை, நாற்காலிகளைத் தூசு தட்டிவிட்டு அவர் அமர்ந்தார். புதிதாக வேலைக்கு வந்தவனானாலும் ரொம்பவும் நெஞ்சழுத்தமும், திமிரும் படைத்த பியூன் என்ற கசப்புடன் அவர் ஒரு கோப்பைப் பிரித்தார்.

'வந்ததும் கேக்கணும்.'

முந்திய நாள், தொடர்ச்சியாகச் சில நாட்கள் அலுவலகத்துக்குத் தாமதமாக வந்ததற்காகத் தாம் ஒரு ஊழியனுக்கு ''மெமோ'' கொடுத்தபோது, தம் நண்பர் ரத்தினசாமி, ''ஏன் சார் வம்பு? நீங்க இருக்கப்போறதோ இன்னும் ஒரு வாரம், எதுக்கு எல்லோருடைய விரோதத்தையும் சம்பாதிச்சுக்கிறீங்க? இத்தனை நாள் கண்டிப்பும் கருருமாய் இருந்தது போதுமே?'' என்று அறிவுரை சொன்னது நினைவில் நெருடிற்று. அவர் கசப்புடன் சிரித்துக் கொண்டார்.

'போற நேரத்திலே விரோதம் வேண்டாம்கிறதுக்காக என்னோட கடமையை நான் செய்யாமல் இருக்கலாமா? இது கோழைத்தனமில்லையா! இத்தனை நாளும் கண்டிப்பாய் இருந்துட்டு, இப்பப் போயி 'லீனியன்ட்'டா இருந்தா கேலியா இருக்



# கோத்ரெஜ்

## நரை முடி பற்றியும் ஹேர் டைகள் பற்றியும் ஏற்படும் கவலைகள் அனைத்தையும் போக்குகிறது

**ஹேருக்கு டை செய்வது செயற்கையான தோற்றமளிக்கக்கூடும்.**
ஆனால், நீங்கள் சரியான 'டை'யை தேர்ந்தெடுத்துவிட்டால் இயற்கையாகவே விளங்கும். கோத்ரெஜ் ஹேர்டை தேர்ந்தெடுத்த பொருட்களால் தயாரானது— நேர்த்தியாக டை செய்கிறது. எவராலும் வித்யாசம் காண முடியாது.

**நரை முடி 'எடுப்பான' தோற்றத்தைத் தருகிறது!**
'எடுப்பான' தோற்றம் அளிக்கக் கூடும். ஆனால், தோற்றத்தில் முதுமையையும் எடுத்துக்காட்டும். உங்கள் நண்பரையே கேட்டுப் பாருங்கள்.

**முடிக்கு டை செய்யும் தொல்லையை எவர் விரும்புவர்?**
ஒருவரும் விரும்பமாட்டார். அதனால்தான், கோத்ரெஜ் வழங்குகிறது தானாகவே பரவும் ஒரு ஹேர் டை. இனி நீங்கள் 'முடியை பகுதிகளாகப் பிரித்து சாயம் பூசும்' தொல்லைக்கு உள்ளாக வேண்டாம். இந்த டை உபயோகித்து, நுரை வரச்செய்து, சிறிது காத்திருந்து, கழுவி விடுங்கள். ஆஹா... எவ்வளவு சுலபம்.

**ஹேர் டை உபயோகிப்பதினால் முடி பாதிக்கப்படுமா?**
ஆம், பழைய முறையில் செய்யும் பட்ட சாயங்கள் பாதிக்கலாம். அதனால்தான், கோத்ரெஜ் அலாதியான ஹேர் டை தயாரித்தளிக்கின்றனர். இதில் 'ஹேர் கண்டிஷனர்' சேர்க்கப் பட்டிருப்பதால் உங்கள் முடிக்கு இளமை தோற்றத்தை அளிக்கிறது.




# கோத்ரெஜ் பர்மனென்ட் ஹேர் டை

**ஹேர் டை செய்வதிலுள்ள தொல்லையைப் போக்குகிறது; தோற்றத்தில் இளமை பூரிக்க வைக்கிறது.**

2 வண்ணங்களில்: இயற்கையான கறுப்பு, கரும் பழுப்பு. 20 மி.லி. மற்றும் 40 மி.லி.

CASGS-154-204 TAM

காதோ? நானென்ன என் கீழே வேலே செய்யறவானே 'டீஸா' பண்ணினேன்? தப்புச் செய்யறவானேத் தண்டிக்கிறது எப்படித் தப்பாகும்?நேரந் தவறுமே ஆபீசுக்கு வர்றது. தனக்குன்னு உள்ள வேலேயை நாணயமாச் செய்யறது. இந்த ரெண்டையும் செய்யாத வானே மடியிலே தூக்கி வெச்சுண்டா கொஞ்ச முடியும்?'

''குட் மார்னிங் ஸார்!''

தாமோதரன் பக்க வாட்டில் தலேயைத் திருப்பிப் பார்த்தார். மரியாதையுடன் அவரைப் பார்த்தபடி நின்ருர் மாணிக்கம்.

''சும்மா பார்த்துட்டுப் போலாம்னு வந்தேன் சார்!''

''இன்னும் சரியா ஒரு வாரம்தான் இருக்கு!'' என்று கூறிச் சிரித்த தாமோதரன் பேனவை மூடிவைத்தார்.

மாணிக்கம் சிரிக்கவில்லே. சிந்தனேயுடன் தம் அலுவலரைப் பார்த்தார்.

''சார்! இருபத்தாறு வருஷத்துக்கு முந்தி நீங்க இந்த ஆபீஸ்ல ஹெட் கிளார்க்காய் இருந்தப்ப எனக்கு வேலே யெல்லாம் கத்துக் குடுத்தீங்க. நான் ஒரு எஸ். ஸி.யாயிருந்தாலும் விசேஷமாகக் கவனிச்சீங்க. இல்லேன்னு இன்னேக்கும் நான் ஒரு க்ளார்க்காத்தான் இருந்திருப்பேன். 'ஹெட் கிளார்க் ஆகியிருக்க மாட்டேன், சார்!'' என்ருர்.

ஒருசில பணியாளர்கள் கழுப்பாணித்தனம் செய்து கொண்டிருக்க சரியாக எழுதத் தெரியாத ஒரே குறையால் நாணயம் மிக்க மாணிக்கம் வேலே செய்ய இயலாமல் இருப்பதைக் கவனித்த அவர் முன்னவரைக் கண்டிப்பதிலும் பின்னவனுக்கு வேலே கற்றுத் தருவதிலும் இறங்கினர்.

மூன்ருண்டுகள் இருந்த பிறகு மாற்றலாகி அவர் டில்லிக்குப் போனபோது மாணிக்கம் அனுதையாக உணர்ந்தான்.

பின்னர் வடக்கே பல ஆண்டுகள் இருந்த பிறகு கடந்த ஐந்து ஆண்டுகளாகச்சென்னேயில் பணியாற்றுகிருர். நேரந் தவருமையைக் கடைப்பிடிக்காதவர்கள், வேலேகளே முடிக்காதவர்கள், திருட்டுத்தனமாக மூன்று மணிக்கே கிளம்பிப் போய்விடுகிறவர்கள் ஆகியோருக்கெல்லாம் விளக்கம் கேட்டு 'மெமோ' கொடுக்கலானர். இது போன்ற காரணங்களுக்காக மெமோ கொடுக்கப்படும் வழக்கமே அவர் வருவதற்கு முன்னல் இருந்திராத நிலேயில் ஊழியர்களுக்கெல்லாம் அவர்மீது எரிச்சல் கிளர்ந்ததில் வியப்பு இல்லேதான். இருக்கையில் அமர்ந்து தூங்கியதற்காக, சிகரெட் பிடித்தபடி வேலே செய்தமைக்காக, தாமதமாக வருகைக்காக என்றெல்லாம் அவர் மாற்றலாகி வந்த ஒரே ஆண்டுக்குள் சுமார் நூறு பேருக்கு மெமோக்கள் கொடுக்கப்பட்டன!




''நான் இப்ப வந்த விஷயம், நீங்க எங்க செக்ஷன் ஆபீசர்ங்கிற முறையிலே உங்களுக்கு ரிடையர்மெண்ட் டே அன்னிக்கு ஒரு சின்ன ஃபேர்வெல் பார்ட்டி குடுக்கலாம்னுட்டு....''

''அதெல்லாம் எதுக்கு மாணிக்கம்? என்னேயோ ஒருத்தருக்கும் பிடிக்காது. அப்படி இருக்கிறப்ப பார்ட்டிக்கெல்லாம் ஏன் ஏற்பாடு பண்றீங்க?''

''ரிடையர் ஆகிப் போற நேரத்துல யாரும் அந்த அளவுக்கு விரோதம் பாராட்ட மாட்டாங்க சார்!''

''என்னமோ செய்யுங்க! ஆனு ஒண்ணு. பார்ட்டின்னு வெச்சீங்கன்னு ஸ்டாஃப்கிட்ட என்னேட நிலேயை எக்ஸ்பிளெய்ன் பண்றதுக்கும், என்னுல மனசு புண் பட்டவங்ககிட்ட மன்னிப்புக் கேட்டுக்கிறதுக்கும் அது ஒரு சந்தர்ப்பமா அமையுந்தான்.... உங்க இஷ்டம்!'' என்று அவர் சொல்லிக்கொண்டிருந்தபோது பியூன் மாதவன் வந்தான். சலாம் செய்தான். முகத்தில் மரியாதை தெரியவில்லே.

''ஏம்ப்பா லேட்டு?''

''லேட்டாயிருச்சு!''

''அதான் ஏன்னு கேக்கறேன். இந்த மாசம் ஏழெட்டுத் தடவை லேட்டா வந்திருக்கே. புதுசா வேலேக்கு வந்திருக்கே. ஞாபகம் வச்சுக்கோ.''

மாதவன் பதில் சொல்லா விட்டாலும் முகத்தில் எரிச்சல் தெரிந்தது.

அன்று மாலே அவர் தமது அறையை விட்டு வெளியே வந்த நேரத்தில் வராந்தாவில் கேட்ட சில குரல்கள் அவர் கால்களே நிறுத்தின.

''இன்னும் ஒரு வாரம்தான் ஆட்டமும் பாட்டமும்.''

''அதுக்குப் பிறகு ஒய்ப்புக்கும் சன்ஸ்அண்ட் டாட்டர்ஸுக்கும் மெமோ குடுப்பாரு.''

''நீ வேறே! ஒய்ஃப் கிட்ட மெமோ வாங்கறவங்கதாண்டா ஆபீஸ்ல வந்து அட்டகாசம் பண்றவங்க!''

''சரியாச் சொன்னேடா!''

கொல்லென்று சிரிப்பொலி. அவர்கள் பேச்சால் தாம் அடைந்த சிறுமையைத் தாங்க மாட்டாமல் அவர் திரும்பவும் தம் அறைக்குள் புகுந்தார். பேச்சும் சிரிப்பும் அடங்கிய பிறகு வெளியே வந்தார்.

''அப்பா அப்பா! உங்க ஆபீஸ்லேந்து மிஸ்டர் மாணிக்கம் வந்திருக்கார்....''

''எனக்குப் பார்ட்டி தரக் கூடாதுன்னு எல்லாரும் கலாட்டா பண்ணுங்க. அதைச் சொல்லத்தானே வந்தே?'' என்ருர்.

மாணிக்கம், ''ஆமா சார்!'' என்ருர்.

ஒருவேளே தமது ஊகம் தவருே என்ற நம்பிக்கையுடனேயே அவ்வாறு வினவிய அவர் 'ஆமாம்' என்றதும் உண்மையாகவே அதிர்ந்தார். மார்பில் ஊசி குத்தியது.

மறு நாள் காலே அவர் ஏழரைக்கெல்லாம் அலுவலகம் சென்ருர். காவலாள் வியப்புடன் கும்பிட்டான். அந்தக் காலத்து ஆள்,



# இந்தியா டுடே

மெரீனா கடற்கரையில் சிலையாக நின்றுகொண்டிருக்கும் பாரதியார், திடீரென்று மனித உருவில் தோன்றி, பூக்காரி கண்ணம்மாவுடன் பேசினால் எப்படி இருக்கும்? அவர் இன்றைய இந்தியாவைப் பார்த்தால் என்ன நினைப்பார்?

கவிஞர் வாலியின் கற்பனைக்கு ஏற்ற மிகவும் கனமான சப்ஜக்ட். (முன்பு கிருஷ்ண பரமாத்மா ஹோட்டல்காரர் முன் தோன்றுவது போல் ஒரு நாடகம் எழுதவில்லையோ?)

பாத்திரங்கள் சிலேடை மொழிகளாய் உதிர்க்கிறார்கள். அரசியல்வாதிகளை நோக்கிச் சாட்டை வீசுகிறார்கள். (ஆனால் சென்னை மட்டும்தான் இந்தியாவா?) இது மாதிரி அரசியல் சாயலுள்ள நாடகங்களில் சில வசனங்கள் பிரசங்கங்கள் போல் இருப்பதைத் தவிர்க்க முடியாதுதான். அவற்றைச் சுவாரஸ்யமாகச் செய்திருப்பதுதான் வாலியின் சாமர்த்தியம். 'சோ' மாதிரி நேரடித் தாக்குதல் இல்லாமல் 'மைல்டா'ய் இருக்கிறது வாலியார் உபந்நியாசம்!

நாடகத்துக்கு ப்ளஸ் பாயிண்ட்டுகள் 'நாயர்' ராமனின் உணர்ச்சிக் கொந்தளிப்பான பாரதியார் வேஷம். இனி 'நாயர்' ராமன் பட்டத்துக்குப் பதில் 'பாரதி' ராமன் என்று முன் பெயர் ஒட்டிக்கொள்ளுமோ? நடிப்பிலும், வசனம் பேசுகிற கம்பீரத்திலும் மனிதர் பிய்த்து வாங்கி விட்டார்.

மனோரமா பாரதி சாமியின் பக்தையாக — பாரதி வாழ்ந்த காலத்தில் தம் கையால் பூணூல் இட்ட அரிஜன நண்பர் கனகலிங்கத்தின் மகள் கண்ணம்மாவாக — வந்து, புத்தம் புதிய ஒரு கற்பனைப் பாத்திரத்துக்கு உயிரும், உணர்ச்சியும் கொடுத்து நடிக்கிறார்.

குறிப்பிடத் தக்க நடிப்பு என்று ஹநுமந்த ராவ் ஆக வரும் ராமசாமி, கதிர்வேலுவாக வரும் ஐ. எஸ். ஆர், கனகலிங்கமாக வரும் ரத்னம் ஆகிய மற்றவர்களையும் சொல்லலாம்.

பி. கு.: நாடகத்தை ரசித்த திரு இராம. அரங்கண்ணல் அவர்களிடம் 'உங்கள் உண்மையான அபிப்பிராயம் என்ன?' என்று கேட்டேன். சொன்னார் அரங்கண்ணல்:

நல்ல முயற்சி என்ற அளவில் திருப்திதான். ஆனால் குத்தலும் இன்னும் எதிர்பார்த்ததை விடக்குறைவு. இந்தியாவில் காணுகிற எத்தனையோ அக்கிரமங்களையும் அப்பட்டமாகச் சித்திரித்திருக்கலாம் வாலி. அரசாங்கத்துக்குப் பயந்து செய்யாமல் விட்டு விட்டாரோ என்று நினைக்கத் தோன்றுகிறது!

— சாருகேசி

தாம் ஒரு தலைமை எழுத்தாளராக எடுத்த எடுப்பில், மிகச் சிறிய வயதில், அந்த அலுவலகத்தில் நுழைந்தது முதல் இன்று வரையில் அவருக்கு அடுக்கடுக்காகப் பல சம்பவங்கள் ஞாபகம் வந்தன. பூனா, பம்பாய், டில்லி, எல்லா இடங்களிலும் அவருக்குக் கெட்ட பெயர்தான். 'மதராஸி, மதராஸி' என்று கரித்துத்தான் கொட்டினார்கள்.

அந்த அறையில் தமது வாசம் இன்னும் ஒரு வாரம்தான் என்பதை நினைத்துப்பார்த்த போது விளைந்த துன்பத்தை விடவும், தமக்குப் பிரிவுபசார விருந்தளிக்க யாரும் தயாராக இல்லை என்பதும், அப்படி அளித்தாலும் அவரைத் திட்டி அனுப்பத் திட்டமிட்டிருக்கிறார்கள் என்பதும் அவரை அதிகமாய் வருத்தின.

''தம்தம்'' என்று உலக்கையாக இடித்த மார்பை அவர் அழுத்திப் பிடித்துக் கொண்டார். மார்பின் இடிபாட்டுக்குப் பக்க வாத்தியம் போல் சுவர்க் கடிகாரம் 'டங் டங்' என்றது. மணி ஒன்பது.

திடீரென்று மார்பின் இரைச்சல் அதிகமாகியது. தமக்கு ஏதோ ஆகிக் கொண்டிருப்பதாக அவருக்குத் தோன்றியது. அவருள் திகில், கவலை, துயரம் போன்ற உணர்ச்சிகள் பொங்கிய போதிலும் இவற்றையெல்லாம் காட்டிலும் தன்மான உணர்ச்சியே மிகுதியாக இருந்தது.

'அன்புள்ள மாணிக்கம்,
எனக்குப் 'பார்ட்டி' எதுவும் வேண்டாம்'

—இவ்வாறு ஆங்கிலத்தில் எழுதிக் கையெழுத்துப் போட்டு அந்தத் தாளின் மீது கனம் வைத்துவிட்டுச் சாய்ந்தார்.

சற்றுப் பொறுத்து அவரது அறையில் நுழைந்த பெருக்குகிறவர் அவர் இயல்பாகச் சாய்ந்திராத நிலையைக் கண்டு வெளியே ஓடிக் கூக்குரல் எழுப்பவே, எதிர்ப் பிரிவு அலுவலர் — தற்செயலாக அப்போதுதான் வந்திருந்தவர் — ஓடிவந்தார். உடனே டாக்டர் வரவழைக்கப்பட்டார்.

உயிருக்கு ஏதும் ஆபத்து விளையவில்லை என்றும், ஆனால் ஏதோ பேரதிர்ச்சி ஏற்பட்டிருப்பதாகவும் கருதிய அவர் உடனே அவரை இதய நோயாளியாக மருத்துவ விடுதியில் சேர்ப்பிக்க ஏற்பாடு செய்து சென்றார்.

# முதல் குழந்தையா...
# இன்பம் இன்பம்...




ஆனால் அடுத்ததும் உடனடியாக வந்துவிட்டால் துன்பம். 'இதைத் தவிர்க்க,

அடுத்த குழந்தையின் வரவை, விரும்பும் வரையில் ஒத்திப்போட நிரோத். ஒரு நம்பகமான, சௌகரியமான கருத்தடைச் சாதனம். அரசு ஆதரவு காரணமாக மிக மலிவானது.

**நிரோத் உபயோகியுங்கள் உயர் ரக கருத்தடைச் சாதனம்**

davp 81/234

விநியோகஸ்தர்கள்: ப்ரூக் பாண்ட், லிப்டன், ஹிந்துஸ்தான் லிவர், யூனியன் கார்பைட், ஐடிஸி, ஸ்மித் ஸ்டேனிஸ்ட்ரீட், இந்தியன் ஆயில் கார்ப்பொரேஷன், பாரத் பெட்ரோலியம், ஹிந்துஸ்தான் பெட்ரோலியம், அரசன் மேட்ச் இண்டஸ்ட்ரி.

# பெண்களால் ஆண்களுக்கு வேலை வாய்ப்பு குறைகிறதா?





● எல்லாத் துறைகளிலும் வேலை வாய்ப்பில் ஆண்களுடன் பெண்கள் போட்டியிடுவது என்பது சகஜமாகிவிட்டது. பெண்களின் பலத்த போட்டியால், உண்மையாகவே ஏழ்மையான நிலையில் உள்ள ஓர் ஆணுக்குப் பல சமயம் வேலை கிடைக்காமல் போய்விடுகிறது. பத்தாண்டுகளுக்கு முன் மொத்தம் வேலைக்குச் சென்ற 16.70 லட்சம் பேரில் மூன்று சதவீதம் பெண்கள். கடந்த பத்தாண்டுகளை எடுத்துக்கொண்டால் வேலை வாய்ப்பு அதிகரித்திருந்தாலும் அதில் பெண்களுக்கான வாய்ப்பு முன்னிலும் அதிகம். மொத்தமாகப் பார்க்கும்போது 10 சதவீதம் வேலை வாய்ப்புக்களைப் பெண்கள் பெற்றுள்ளார்கள். ஆண்களுக்குப் பெண்கள் சமம் என்ற பேச்சு இருந்தாலும், பல, ஆண்கள் இந்தப் பெண்களின் போட்டியால் வெறுப்படைந்து போயிருக்கிறார்கள். இந்தப் பிரச்னையைப் பற்றி விவாதிக்கிறார்கள் சென்னை மத்திய கூட்டுறவு வங்கியில் வேலை பார்க்கும் திரு விஸ்வநாதனும், பாரி கம்பெனியில் பணிபுரியும் திருமதி லலிதாவும். அவர்களது காரசாரமான விவாதம் இதோ:

விஸ்வநாதன்: இப்போதெல்லாம் எந்த அலுவலகத்துக்குச் சென்றாலும், வேலை செய்பவர்களில் ரொம்பப் பேர் பெண்களாக இருக்கிறார்கள். எவ்வளவோ ஆண்கள் வேலை கிடைக்காமல் வாழ்க்கையைக் கேள்விக் குறியாக்கிக் கொண்டு வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். ஆனால் பெண்களோ . பொழுது போக்குக்கு வேலைக்கு வருகிறார்கள். ஏதோ குறைந்த சதவீதம் பேர்தான் வறுமையினால் வேலைக்கு வருகிறார்கள். எந்தத் துறையை எடுத்தாலும் அங்கே பெண்கள் போட்டிக்கு வந்து விடுகிறார்கள். இதனால் உண்மையிலேயே ஏழையாகஉள்ள ஒரு ஆணுக்கு வேலை கிடைக்காமல் போகிறது.

லலிதா: பெண்கள் வேலைக்குச் செல்வதன் முக்கிய காரணம் ஆண்கள்தான். இந்தக் காலத்து வாலிபர்கள், வேலைக்குப் போகும் பெண்ணைத்தானே விரும்புகிறார்கள்? வாலிபர்கள் வரதட்சிணை வாங்காமல் இருப்பார்களேயானால் பெண்கள் வேலைக்குப் போவது ஓரளவு குறையும். ஆனால் இன்றைய சமூக — பொருளாதார சூழ்நிலைகளில் கணவன் — மனைவி இருவரும் சம்பாதித்தால்தான் குடும்பத்தைக் கஷ்டமில்லாமல் நடத்த முடியும்.

வி: பெண்களுக்கு வேலை வாய்ப்புக் கொடுக்க வேண்டுமென்றால் அதற்கென்று சில துறைகள் உள்ளன. கடிகாரத் தொழிற்சாலைகள், பாக்கிங் யூனிட்டுகள் போன்றவற்றில் பெண்கள் வேலை செய்வதைத் தவறு என்று சொல்லவில்லை. ஆனால் இந்தக் கண்டக்டர் வேலைக்கும், காவல் துறை அதிகாரி வேலைக்கும் பெண்கள் வரலாமா? இன்றைக்கு வளர்ந்து வரும் குற்றச் சூழலில், மென்மையான வளைக் கரங்கள் கொண்ட பெண்கள் அதிகாரிகளாக இருப்பது மேலும் குற்றவாளிகளுக்குத் தைரியத்தை உண்டாக்குமே தவிர, குற்றங்களைக் குறைக்க வழி வகுக்காது.

லலிதா: இதை நான் மறுக்கிறேன். காவல் துறை அதிகாரிகளாக ஏன் பெண்கள் வரக் கூடாது? புத்திசாலியாக இருந்தால் போதும். புத்திமானே பலவான். காவல் துறை அதிகாரிக்கு மூளை வேலைதான் அதிகம். சொல்வதை நிறைவேற்



# ஆன்றோர் வாக்கு:

ஒரு சின்ன ஓட்டை வழியாக உள்ளே வரு கிற சூரிய கிரணம் எல்லா இருட்டையும் எப்படிப் போக்கி விடுகிறதோ அப்படியே உள்ளத்தில் எவ்வளவு துக்கம், கவலை இருந் தாலும் ஒரு க்ஷணமாவது ஆனந்தம் வேண்டு மானால் ஆனந்தமாக யோக நித்திரையில் இருப்பவனை, ஆனந்தமாக நடனம் ஆடு பவனை நினைக்க வேண்டும். அந்த ஆனந்த சமுத்திரத்தினுடைய ஒரு திவலை உள்ளே விழுந்தால் போதும், இவ்வளவு துக்கமும் மறைந்துபோய் ஆனந்தம் பிரகாசிக்க ஆரம்பித்து விடும். நடராஜன் தாண்டவத் துக்கு ஆனந்த தாண்டவம் என்று பெயர்.

**ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்**

மதம் இல்லாமல் வாழ்க்கையை நடத்திச் செல்ல விஞ்ஞானம் நமக்கு உதவாது. அத னால் உதவவும் முடியாது. வேறு எப்போதை யும்விட விஞ்ஞானமும் தொழில் நுட்பமும் வளர்ந்துவிட்ட இப்போதுதான் மதம் அதிக மாகத் தேவைப்படுகிறது. மதம் இல்லாமல் பொருளியல் முன்னேற்றம் மட்டும் சாத்திய மானால்கூட அது அபாயமானது.

—ராஜாஜி

ஒரு தேசத்தின் நாகரிகம் அல்லது அறிவு முதிர்ச்சி இன்ன தன்மையுடையதென்று கண்டுபிடிக்க வேண்டுமாயின், அதைக் கண் ணாடி போல் விளக்கிக் காட்டுவது அந்த நாட்டில் வழங்கும் பாஷையிலுள்ள இலக் கியம் அதாவது காவியம் முதலிய நூல் களேயாம். —பாரதியார்

உறுதிக்கு இன்றியமையாதது ஒன்றுளது. அஃது அன்பாகும். எவனுக்கு எப்பொருளி னிடத்து அன்பு நிலைத்து முருகு எழுகிறதோ, அவனுக்கு அப்பொருளினிடத்து உறுதியும் படிந்து நிலைத்து நிற்கும். ஆகவே உறுதி அன்புடன் தொடர்புடையதெனக் கொள்க.

—திரு.வி.க.

றத்தான் ஆட்கள் இருக்கிறார்களே! அதுவும் தவிர பெண் குற்றவாளிகள் அதிகமாகிவிட்ட இந்தக் காலத்தில், காவல் துறையிலும் பெண்கள் இருப்பது சரிதான்.

விஸ்வ: கல்யாணம் ஆன பெண்களுக்கு வேலை கிடையாது என்ற சட்டம் கொண்டு வரவேண்டும். இதனால், ஆண்களின் வேலை வாய்ப்பு நிச்சயம் அதிகரிக்கும்.

லலிதா: ஏன் பெண்களையே வேலைக்கு எடுத் துக்கொள்ளக் கூடாது என்றுதான் சட்டம் போடுங்களேன்—அப்போது தீர்ந்துவிடுமா ஆண்களிடையே நிலவும் வேலை வாய்ப்புப் பிரச்னை? பெண்கள் எந்த வேலையையும் பொறுப்போடு செய்வார்கள். அதிகாரி களுக்குப் பயந்து நடப்பார்கள். வேலை நிறுத்தம் போன்றவற்றில் ஈடுபட மாட் டார்கள். அதனால்தான் நிறைய நிறு வனங்கள் பெண்களை வேலைக்கு வைத்துக் கொள்கின்றன.

விஸ்வ: அப்படி யென்றால் ஆண்களைப் பொறுப்பற்றவர்கள் என்கிறீர்களா?

லலிதா: நான் அப்படிச் சொல்லவில்லை. பெண்கள் பொறுப்போடு வேலை செய் வார்கள் என்றுதான் சொன்னேன்.

விஸ்வ: கடைசியாக ஒரு கேள்வி: ஒரு குடும்பத்தில் — ஆண்-பெண் இருவரும் வேலைக்குப் போவதால் குடும்பத்தையும், குழந்தைகளையும் சரியாகக் கவனிக்க முடி யாத நிலை பெண்களுக்கு ஏற்படுகிறது. கணவனுக்கு ஏற்ற பணிவிடைகளை வேலைக் குச் செல்லும் பெண், பலவித காரணங் களால் செய்ய முடியாது. குடும் பத்தில் அமைதி குலைவதற்கு வாய்ப்பு உண்டாகும். குழந்தைகளைச் சரியாகக் கவனிக்க முடியாது. இந்தக் காரணங் களால் திருமணமானவுடனேயே பெண்கள் வேலையை விட்டு விட்டால், ஓரளவுக்கு ஆண்கள் வேலை வாய்ப்பு அதிகரிக்கக்கூடும்.

லலிதா: வேலைக்குச் செல்லும் நிறையப் பெண்கள் வீட்டில் குழந்தைகளைக் கவனிப் பதற்கு யாரேனும் இருப்பார்கள். இல்லா விட்டால் குழந்தைகள் பாதுகாப்பு இல் லம் இருக்கிறது. குடும்பம் அமைதியாகச் செல்லக் கணவன் — மனைவி இருவருக்கும் சரியானபடி மன ஒற்றுமை இருந்தால் போதும். வேலைக்குச் சென்றபடியே குடும் பப் பொறுப்பையும் திறமைசாலியான ஒரு பெண்ணால் நன்கு நிறைவேற்ற முடியும். இப்போது நானும் கடைசியாக ஒரு கேள்வி கேட்கிறேன்: பெண்கள் வேலைக் குப் போக வேண்டாம் என்று கூறும் ஆண்கள் எல்லோரும் காரியாலயங்களுக் குச் செல்பவர்களைத்தான் குறிப்பிடு கிறார்கள். வீடுகளிலும் வயல்களிலும் உடலால் உழைத்துக் கூலி வேலை செய்யும் லட்சக்கணக்கான பெண்களை வேலை செய்ய வேண்டாம் என்று கேட்டுக் கொள் கிற துணிவு எந்த ஆண் மகனுக்காவது வருமா?

கட்டுரை, சந்திப்பு ஏற்பாடு: ப்ரியன்

படங்கள்: ஜெய்மோகன்







# அன்புடன் கொஞ்சம் வம்பு



● மேடை நாடகங்களில் நடிப்பவர்கள், சினிமா சான்ஸ் எதிர்பார்த்து ஏங்குகிறார்கள். சினிமா நட்சத்திரங்களோ மார்க்கெட் 'டல்' அடித்தால், நாடகங்களில் நடிக்க ஆரம்பித்து விடுகிறார்கள். ஸ்ரீகாந்த், விஜயகுமார், மஞ்சுளா... லிஸ்டில் லேட்டஸ்ட் அடிஷன் வடிவுக்கரசியாம். 'கலா ரசனாவின் 'கேள்வியின் நாயகனே'வில் நாயகியாகப் போகிறாராம்.

● விசுவின் சினிமா மார்க்கெட் சூடு பிடித்துள்ள அதே நேரத்தில் மௌலியின் மார்க்கெட் கொஞ்சம் டல்லாம். 'வாரிசு உருவாகிறது' முடிந்து, கொஞ்ச நாளாகியும் சில ஏரியாக்களில்டிஸ்ட்ரிபியூஷன்எடுக்க ஆளில்லையாம். எப்படியோ விற்று, படத்தை ரிலீஸ் செய்து விட்டார்களாம்.

● சென்னையில் பல்லவன் பஸ்களில், மாணவ, மாணவியர்க்கான பஸ் டோக்கன்களைக் கொடுத்தால், உடனே அதை வாங்கிக் கொண்டு கண்டக்டர்கள் டிக்கெட் தருவதில்லை. கொஞ்ச நேரம் காத்திருக்கச் செய்துதான் கொடுப்பார்கள். இத்தகைய டோக்கன் ஒன்றுக்கு அவர்களுக்குக் கிடைப்பது ஒரு பைசா என்பதால்தான் இத்தகைய அலட்சியமோ?

● சென்னையில் ஒரு பெண்கள் பள்ளிக்கூடம் மாணவிகளை வீட்டிலிருந்து 'பருப்புக் கொண்டு வா; காய்கறி கொண்டுவா' என எல்லாவற்றையும் ஆளுக் கொன்றாய்க் கொண்டுவரச் செய்து, பல ஐட்டங்கள் தயாரித்து (மாணவிகளை விட்டே) மாணவிகளிடமே விற்றுப் பணமாக்கும் நவீன கான்டீன் நடத்துகிறார்களாம். பணம் யாருக்கு? ஸ்கூலுக்காம்.

● ஒரு சென்னைக் கல்லூரியில் மாணவர்கள் இந்த வருடம் 'கலாசார விழா' நடத்தக் கல்லூரி முதல்வரிடம் அனுமதி கேட்டார்களாம். அவரோ, ''சென்ற ஆண்டு எந்த லட்சணத்தில் நடத்தினீர்கள் என்று தெரியாதா? இந்த வருஷம் ஃபெஸ்டிவலும் வேண்டாம் ஒன்றும் வேண்டாம் என்று சொல்லி விட்டாராம். சென்ற வருடம் அப்படி என்ன நடந்தது? ஒரு பழைய மாணவர் சொன்னார்: விழாவில் பங்கேற்கவந்த இரண்டு கல்லூரிகள், தம் பழைய பகைமையை வெளிப்படுத்தக் கலாட்டா செய்து, டியூப் லைட், நாற்காலிகளை உடைக்க, நாலு நாள் விழா இரண்டே நாளுடன் நிறுத்தப்பட்டு விட்டதாம்.

● ஒரு நாள் சென்னைத் தொலைக் காட்சி நிலையத்துக்குப் போயிருந்தபோது பெரும்பாலான அறைகளில் ஒருவரும் இல்லாது போனாலும், ஃபான்கள் வேகமாய்ச் சுழன்று கொண்டிருந்தன. எப்போதுமே இப்படித்தானாம். ஒருவர் பெயரைச் சொல்லி 'அவரைப் பார்க்க வேண்டும். ரூமில் இல்லை' என்றேன். 'ரூமில் ஃபேன் சுற்றுகிறதல்லவா அப்படியெனில் இங்கேதான் எங்கேயாவது இருப்பார். நீங்கள் ரூமில் இருங்கள். வந்து விடுவார்' என்றார். ஒருவர் நிலையத்தில்தான் இருக்கிறார் அல்லது இல்லை என்று காட்ட இப்படியும் ஓர் ஏற்பாடா?

- ஜூலி

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

விடை: அனைத்துமே ஆட்டோ ஓட்டிகள் கூறியவைதாம்.

தொகுப்பு: சிக்கி

படங்கள்: உத்ரா

# சாதாரண மனிதன்

அத்தை ஜகதாவுக்கு மேலும் ஓய்வு கொடுக்க எண்ணி விடுமுறை நாட்களில் தோட்ட மேற்பார்வையையும் சந்தியா தானே ஏற்றுக் கொண்டு விட்டிருந்தாள். அன்று விடியற்காலையிலேயே வந்து தோட்டத்தைச் செப்பனிட்டுவிட்டுச் சந்தைக்கு அனுப்ப வேண்டிய காய்கறிகளைப் பறித்துக் கூடைகளில் நிரப்பி உள்ளே கொண்டுவந்து வைத்துவிட்டு மாரப்பன் விடைபெற்றுக் கொண்டு போய்விட்டான். அத்தையிடம் சமையலறையை ஒப்படைத்து விட்டுத்தோட்டத்தைச் சுற்றி வளைய வந்து எல்லாவற்றையும் பொறுப்புடன் பார்வையிட்டுச் சரிசெய்வதற்குள் அவளது கால்கள் ஓய்ந்து போய் விட்டன.

அவளுக்கே அதைக் கவனிப்பது அத்தனை சிரமமாயிருந்தால், வயதான அத்தைக்கு இனி எப்படிச் சாத்தியமாகும்? தொடர்ந்து அவர்களால் அந்த வீட்டையும் தோட்டத்தையும் ஆண் உதவியின்றி நிர்வகிக்க இயலுமா?

தன்னுள் எண்ணிக் கலங்கியபடி அவள் மாட்டுக் கொட்டிலருகே வந்தபோதுதான் ஞாபகம் வந்தது. மாரப்பனுக்கு அன்று ஏதோ அவசரம். செல்லக்குட்டியையும் அதன் கன்றையும் குளிப்பாட்டிக் கட்டிவிட்டுத் தீனி வைக்க மறந்து ஓடிவிட்டிருந்தான். காலடி ஓசை கேட்டதும், செல்லக்குட்டி கயிற்றை இழுத்துக் கொண்டு அவள் பக்கம் திரும்பிப் பார்த்தது. அதன் கண்களில்தான் எத்தனை கேள்விகள்!

'இதோ வந்துட்டேன். உனக்குத் தீனி போட்டுட்டுத்தான் எனக்குக் காப்பி டிபன். கோவிச்சுக்காதே!' — சொல்லிவிட்டு அவள் உள்ளே வேகமாகப் போனாள். பின்கட்டிலிருந்த சிறிய அறையில் விறகு, அடுப்புக்கரி முதலான பொருள்களுடன் மாட்டுக்கு வேண்டிய தீனிப் பொருட்களை அத்தை வாங்கிப் பத்திரமாகச் சாக்குப் பைகளில் சேமித்து வைத்திருந்தாள்.

துவரம் பொட்டு, கோதுமைத் தவிடு, பொன்னி மாவு என்று எல்லாவற்றிலும் இரண்டு கையளவு அள்ளி இரும்பு வாளியில் போட்டு, குடத்திலிருந்த கழுநீரில் ஊற வைத்துத் தயாராக்கியிருந்த புண்ணாக்கையும் கலந்து கலக்கி எடுத்துக் கொண்டு மாட்டுக் கொட்டகைக்கு விரைந்தாள். மாட்டுக்கும் கன்றுக்கும் தீனி போட்டுத் தண்ணி காட்டிவிட்டு மாரப்பன் போட மறந்து, வெட்டிக் கட்டாக வேப்ப மரத்தடியில் போட்டுவிட்டுப் போயிருந்த புல் கட்டையும் அகத்திக் கீரைக் கத்தையையும் தூக்கிக் கொண்டு வந்து அவைகளுக்கு விநியோகித்தாள்.

தோட்டத்துப் பம்பு செட்டு கிணற்று நீரை இறைத்துக் கொண்டிருந்தது. குவளையில் கொஞ்சம் நீரைப் பிடித்துத் தன் கைகளைக் கழுவிக்கொண்டாள். பம்பு செட்டு எழுப்பிய சத்தத்தில் அவள் கவனிக்கவில்லை. மூச்சிரைக்க உள்ளேயிருந்து ஓடி வந்த ஸாம்சன் தாவியபடி அவள் மேல் வந்து விழுந்த போது அதைத் தள்ளிவிட்டு நகர்ந்தவள் ஒரு கணம் திடுக்கிட்டுப் போனாள்.

காலையில் அந்த வேளையில் வீட்டுத் தோட்டத்துக்குள் கிரிதரன் வந்து நிற்பதைக் காண அவளுக்கு மிகவும் அதிசயமாக இருந்தது.

"நீங்க இங்கே இருப்பதாக உங்க அத்தை சொன்னாங்க... உங்க தோட்டத்தைப் பார்க்க ஆசையாக இருந்தது வந்தேன்...." என்று



# 'லக்ஷ்மி'

கூறிக்கொண்டு மாட்டுக் கொட்டில் அருகே வந்தான். கீழே குனிந்து ஒரு கொத்து அகத்திக் கீரையை எடுத்து மாட்டின் முன் நீட்டினான். வெடுக்கென்று அதை அவன் கையினின்றும் வாயால் பற்றிக்கொண்டு செல்லக்குட்டி திருப்தியுடன் கடித்து விழுங்குவதைக் கண்ட சந்தியா வியப்புடன் முறுவலித்தாள்.

''ஸாம்சனைப் போல் எங்கள் மாடு செல்லக்குட்டியும் ரொம்பப் பொல்லாது. பழக்கமில்லாதவங்க கிட்ட வந்தாலும் போதும், கொம்புகளை ஆட்டிக்கிட்டுச் சீறும். உங்கள் கையிலிருந்து கீரையைச் சாதுவா வாங்கிச் சாப்பிடுகிறதே!... அதிசயப்பட்டாள்.

ஆரம்பத்தில் நான் கால்நடை மருத்துவத்துக்குத்தான் படிக்க விரும்பினேன். எனக்கு நாய், பூனை, மாடு போன்ற மிருகங்கள் மீது ரொம்பப் பரிவு. ஆனால் கல்வியின் திசை மாறிப் போச்சு.''

''நன்றி இல்லா மனிதக் கூட்டத்துக்கு வைத்தியம் செய்ய டாக்டருக்குத் தவறிப்போய்ப் படிச்சுட்டேன்னு சொல்ல வரீங்க... இல்லையா? – வேடிக்கையாகக் கேட்டுவிட்டு மெல்லச் சிரித்தாள்.



''மனிதர்கள் எல்லோருமே நன்றியில்லாதவங்கன்னு ஒட்டு மொத்தமாச் சொல்லிவிட முடியுமா?... ஆமாம் நீங்க இந்த ஒரு மாடுதான் வச்சுக்கிட்டிருக்கீங்களா.....'' கேட்டபடி செல்லக்குட்டி அருகே சென்று அதன் முதுகைத் தட்டிக் கொடுத்தான்.

''அடுத்தபடியா இது எத்தனை பால் கறக்கும்னு எல்லாரும் கேட்கிற கேள்வியைக் கேட்டுடாதீங்க. இந்த ஒண்ணுதான் இப்ப சத்தியா இருக்கு. இதை வச்சுச் சமாளிக்கிறது அத்தைக்கு இப்போ கொஞ்சம் சிரமமாக இருக்கு. கறவை மரத்துப் போன மாடு. ஆனால் அதுக்காக நாங்க கவனிக்காது அசட்டை பண்றதில்லே. பால் கறந்தபோது ஊட்டமா எப்படித் தீனி கொடுத்துக் கவனிச்சமோ அதுபோல இப்பவும் பார்த்துக்கிறோம்.''

''வயதான மனிதர்களே குடும்பத்துக்குப் பாரம்னு நினைக்கிற காலம் இது!'' — மென்மையாகச் சிரித்தான் அவன்.

''எங்க அப்பா சொல்வார், 'பந்தயக் குதிரை நன்றாக ஓடி ஜெயிச்சுக் கொடுக்கும் வரை அதைத் தீவிரமாகக் கவனிச்சுக்குவாங்களாம். ஒரு ஓட்டத்தில் இடறி விழுந்து காலை முறிச்சுக்கொண்டுட்டா அதைச் சுட்டுக் கொன்று விடுவார்களாம். எனக்குக் கேட்கவே ரொம்பச் சங்கடமா இருந்தது. பால் கரக்கும் வரை மாட்டை வைச்சுக் கொண்டுவிட்டு அது கிழமாகிவிட்டதும் விக்க நினைக்கிறது ரொம்பத் தவறுன்னு மனசில் பட்டது. அப்பா வாங்கி அருமையா குழந்தையைப் போல் வளர்த்த மாடு இது.





அதனாலே எங்களுக்கு இதைக் கடைசிவரை வச்சுக் காப்பாத்தணும்னு ஒரு ஆவல்.''

''நான் இந்த மாட்டின் சொந்தக்காரனா இருந்தால் அப்படித்தான் முடிவெடுத்திருப்பேன்.''

வியப்புடன் அவனை நிமிர்ந்து பார்த்தாள் சந்தியா. அவனுக்கும் அவளைப் போல் சட்டென நெகிழ்ந்து போகும் சுபாவம் இருக்கிறதே! விரைவில் பேச்சை மாற்ற விரும்பி, ''இந்தத் தோட்டத்தில் உள்ள செடி, கொடி, மரம் எல்லாம் அப்பா நட்டுப் பயிராக்கியவை....'' என்று சொல்லிக் கொண்டு நடந்தாள். சற்று முன் ஏற்பட்டிருந்த உடல் அயர்ச்சி இப்போது அவளிடம் இருக்கவில்லை. தோட்டம் முழுவதையும் சலிக்காது அவனுக்குக் காட்டிச் சுற்றி வர முடியும் போன்றதொரு உற்சாகமும் தெம்பும் திடீரென்று அவளை ஆட்கொண்டன. இளம் சூரிய வெளிச்சத்தில் பசுமை போர்த்திக் கொண்டிருந்த தோட்டத்தை மிகவும் வியப்புடன் கிரிதரன் பார்த்தான்.

''உங்கப்பாவுக்குச் செடி கொடிகள் மீது ரொம்பவும் ஆசை இருந்திருக்க வேண்டும். எத்தனை தினுசு மரங்கள் — எத்தனை மலர்கள் குரோட்டன்கள்! அப்பப்பா.... அதனால்தான் இந்த வீட்டை நந்தவனம் வீடு என்கிறார்கள் போலிருக்கிறது. இது மாதிரி சூழ்நிலையில் வாழக்கொடுத்து வைத்திருக்கணும்.'' சொல்லிக்கொண்டே ஒவ்வொரு செடியையும் ஆராய்ந்தபடி. மிகவும் செழிப்பாகப் பந்தலில் படர்ந்திருந்த ஒரு பூக்கொடி அருகே வந்தான். நீண்ட காம்புகளுடன் வெள்ளை இதழ்களை விரித்துக் கொண்டு மலர்ந்திருந்த அந்தப் பூக்களிலிருந்து எழுந்த மணம் முகத்தில் மோதியதும் வியப்புடன் நின்றான்.

''ரொம்ப வாசனையா இருக்கே! இந்த மாதிரிப் பூவை நான் பார்த்ததில்லே...''

''அத்தைக்கு இந்தப் பூ ரொம்பப் பிடிக்கும். கோயிலுக்குப் போகும்போது பறிச்சு மாலை கட்டி எடுத்துக்கிட்டுப் போவாங்க'' என்று ஒரு பூவைக் கிள்ளி'' இந்தாங்க... வாசனையைப் பாருங்க'' என்றான்.

வாங்கி முகர்ந்தான். கம்மென்று நூதனமானதொரு சுகந்தமணம்மூக்கில் மோதியது.

''இது என்ன வகையைச் சேர்ந்த மலர்? பேர் என்ன?'' கேட்டபடி நிமிர்ந்தான்.

''இந்தத் தோட்டத்தில் கிட்டத்தட்ட ஏழு வகை மல்லிகை இருக்கு. அதில் இதுவும் ஒரு வகை. பெயர் கேட்டா விநோதமா இருக்கும். அன்னிக்குக் கோவிலில் அர்ச்சகர் சொன்னாரே...'' அவள் முடிக்காது நிறுத்தினாள்.

''ஆமாம்! நினைவிருக்கு... காமபாணம்னு பேர் சொன்னார்.'' திடீரென்று மேலே பேசாது மௌனமாக அவளது சிவந்த முகத்தை ஆர்வத்துடன் ஒரு கணம் மெய்மறந்து பார்த்தான். நெஞ்சு படபடக்க அவள் சட்டென்று அருகிலிருந்த ஜல்வந்தி பாத்தியிலிருந்து சில மலர்களை வேகமாகப் பறிக்கத் தொடங்கினாள். அது சமயம் அத்தை உள்ளேயிருந்து தோட்டத்துக்குள் வந்தாள்.

''தோட்டத்தைப் பார்க்கணும்னு டாக்டர் ஆசைப்பட்டார். சந்தியா இருக்கா. கத்திக் காட்டுவா பார்த்துட்டு வாங்கன்னேன். ....பறிச்ச பூக்களை இந்தக் கூடையிலே போடு. போதும், எல்லாரும் உள்ளே போவோம். டாக்டர்! முதல் முதலா எங்க வீட்டிலே கொஞ்சம் காப்பி பலகாரம் சாப்பிட்டுட்டுப் போகலாம் இருங்க. சூடா ஆப்பம் வார்த்துப் போடறேன். தோட்டத்து மரத்துலே காய்ச்ச தேங்காயை உடைச்சுத் துருவிப் பால் எடுத்து வைச்சிருக்கேன். அதை ஊத்தி ஆப்பம் சாப்பிட்டுப் பாருங்க... வாயிலேயே ஆப்பம் கரைஞ்சு போயிடும்.'' படபடவென்று உற்சாகமாகப் பேசினாள் ஜகதா.

"உண்மைதான் அம்மா. ஆப்பம் ரொம்ப ருசியாக இருந்தது. நன்றி...'' —கூறிக் கொண்டு காப்பி பலகாரத்தை முடித்துக் கொண்டு அவன் முற்றத்தில் கையைக் கழுவ இறங்கினான். சந்தியாவுக்குக் குற்ற உணர்வு நெஞ்சை உறுத்தியது.

''டாக்டர் உங்கள் பில் என்ன ஆச்சுன்னு சொன்னா அதைக் கட்டிவிடச் சௌகரியமா இருக்கும்...''

''இந்த ஊரில் நான் கிளினிக் திறந்ததும் வீட்டுக்கு வந்து கவனிக்க நேர்ந்த முதல் கேஸ் உங்கள் அத்தையம்மாள்தான். அதனால் அதுக்கு பீஸ் ஏதும் எடுத்துக்கிறதில்லேன்னு முடிவு செய்து விட்டிருக்கேன்''— ஸ்ரீதரன் சிரித்தான்.

''வைத்தியர் கடனை வச்சுக்கிறது ரொம்பத் தப்பு தம்பி! தொடர்ந்து ஏதாச்சும் உடம்புக் கோளாறு வந்துக்கிட்டிருக்கும்.... ஏதாவது வாங்கிக்கோ... இல்லாட்டா... நானேயும் பின்னேயும் உங்க உதவி தேவைப்பட்டா ஓடிவந்து கூப்பிட மனசு சங்கடப்படுமே.'' அத்தை குழைந்தாள்.

''அப்படின்னா ஒண்ணு செய்யுங்க. நான் வந்து கவனிச்சதுக்காக உங்க தோட்டத்து மரத்திலே பழுத்த எலுமிச்சம் பழம் ஒரு ஆறு பறிச்சுக் கொடுங்கோ. போதும்.'' — புன்னகைத்தான்.

''ஆறு என்ன பன்னிரண்டு வேணுமானாலும் கொடுக்கிறேன். சர்பத் பண்ணிச் சாப்பிடுங்கோ. இன்னொரு சமயம் நான் போட்டு வச்சிருக்கிற ஊறுகாயிலிருந்து கொஞ்சம் பாட்டிலில் போட்டுத் தரேன். ஹோட்டலில் சாப்பிடுகிறீர்கள் என்று கேள்வி. நாக்குச் செத்துப் போயிருக்கும் தம்பி...'' சொல்லிக் கொண்டே அத்தை வேகமாகச் சாமான் அறைக்குள் சென்றாள். மறுநாள் சந்தைக்கு அனுப்ப வைத்திருந்த கூடைகளிலிருந்து சில எலுமிச்சம் பழங்களைப் பொறுக்கி ஒரு பிளாஸ்டிக் பையில் போட்டு எடுத்துக் கொண்டு வந்தாள்.

அதற்குள் சந்தியா தன் அறைக்குள் சென்று பீரோவைத் திறந்தாள். தனக்குள்ளே ஒருவாறு கணக்கிட்டுக் கொண்டாள். முதல் தடவை ஊசி போட்டு மருந்து கொடுத்துக் கவனிச்சதுக்கும் பின்னர் தொடர்ந்து வந்து கவனிச்சதுக்கும் ஒட்டு மொத்தமாக இருக்கட்டும் என்று வீட்டுச் செலவுக்கு வைத்திருந்த பணத்திலிருந்து ஐம்பது ரூபாய்களை எடுத்து ஒரு கடித உறைக்குள் போட்டு எடுத்து வந்தாள்.

அந்தத் தொகை அவர்கள் சக்திக்கு அதிகம்தான். ஆனாலும் சமயத்துக்கு வந்து உதவிய டாக்டரை மோசம் செய்யலாமா? எண்ணியபடி அத்தை மேஜை மீது வைத்த பிளாஸ்டிக் பை அருகே காகித உறையைக் கொண்டு வைத்தாள்.

''தோட்டத்தைப் பார்க்க ஆசைப்பட்டு வந்தேன். காப்பி பலகாரம் கிடைச்சது. ஆப்பம் ரொம்ப நல்லா இருந்தது. நன்றி... நான் வரேன்.'' — கூறிவிட்டு மேலே தாவிய ஸாம்சனைச் சமாதானப்படுத்தியபடி பிளாஸ்டிக் பையைத் தூக்கிக் கொண்டு அவன் வெளியே கிளம்பினான்.

பரபரப்புடன் பின்னால் ஓடினாள் சந்தியா.

''டாக்டர்! இந்தக் கவரை உங்களுக்காகத்தான் அத்தை வைக்கச் சொன்னாங்க. இதையும்...'' என்று கூறியபடி அவனிடம் காகித உறையை நீட்டினாள்.

''அத்தையம்மாளிடம் நான் கொடுத்ததாகத் தயவு செய்து நீங்க திருப்பிக் கொடுத்துடுங்க. எலுமிச்சம்பழ சர்பத் சாப்பிடும்போது அவர்களை ரொம்பவே நினைச்சுக்குவேன்னு சொல்லுங்க. தாங்க்யூ!....'' மடமடவென்று அவன் வெளியேறிவிட்டான்.

சில விநாடிகளில் மோட்டார் சைக்கிளின் படபட ஓசை கேட்டது. அவள் நெஞ்சம் ஒரு கலவை உணர்வில் வெகு நேரம் படபடத்துக் கொண்டிருந்தது. (தொடரும்)

# ஆறுதல்

சுபா

அவர் நடை வேகத்துக்கு ஈடு கொடுக்க முடியாமல் வேதம் தடுமாறினாள்.

வீசிய காற்றில் கட்டியிருந்த புடவை வேறு படபடத்துத் தொந்தரவு பண்ணிற்று. எடுத்து வைத்த ஒவ்வொரு அடிக்கும் செருப்போடு மணல் பெயர்ந்து, புடவையை மீறிக் கொண்டு, 'சுள்' 'சுள்'ளென்று ஆடு சதையில் சாட்டையாய் வீசிற்று.

'தண்ணீர் கிட்டக்கப் போகாட்டாத்தான் என்ன?...அங்கே அப்படி என்ன கொட்டிக் கிடக்கு?' என்று முணு முணுத்துக் கொண்டாள். மூச்சு வாங்கிக் கொண்டே அரை ஓட்டமும் அரை நடையுமாய் அவரைத் துரத்தினாள்.

நெற்றி நிறையத் திருநீறும், நடுவில் ஒரு வில்லாய்ச் சந்தனமும் வைத்திருந்த சுண்டல்காரப் பையன் திடுக்கென்று வழி மறித்தான்.

''சுண்டல் வேணுமா மாமி?''

வேதத்துக்கு மனசு இளகிப் போயிற்று.

''குடு....''

பையன் சட்டென்று தகரப் பெட்டியை மணலில் வைத்தான்.

''சித்த இரு... பொட்டலம் கட்டறதுக்கு முன்னாடி, அதோ அங்கே போறாரே... அந்த மாமாவைப் பரபரன்னு கையைப் பிடிச்சு இழுத்துண்டு வந்து இங்கே விடு...''

சுண்டல் பையன் சொன்னபடிக்குச் செய்து விட்டான்.

''இப்ப என்னத்துக்குச் சுண்டல்? இப்பத் தானே வீட்ல ஃபுல்லா அடை சாப்பிட்டுட்டு வரோம்...''



''குழந்தை பாவம்னு...''

''ஓஹோஹோ... பையன் பாயிண்ட்லே புடிச்சிட்டானு? கட்ரு அம்பி... ஒரு ரூபாய்க்குக் கட்டு.''

வேதம் ஒரு பொட்டலத்தைக் கையில் வாங்கிக் கொண்டு மற்றதை அவர் கையில் திணித்தான்.

ராமானுஜம் பொட்டலத்தைப் பிரித்தார். ஒவ்வொரு பட்டாணி மணியாய் எடுத்து வாயில் போட்டுக் கொண்டார். நிதானமாய் ஒவ்வொரு அடியாய் எடுத்து வைத்து நடந்தார்கள். தப்படி ஒவ்வொன்றுக்கும் மேலே எழும்பிய மணல், வீசிய காற்றில் அப்படியே பக்கவாட்டில் பறந்து போயிற்று.

''அறிவு கெட்ட ஜன்மாக்கள்...''

ராமானுஜம் திடுக்கிட்டு நின்றார். குரல் வந்த திக்கில் கண்ணைக் கசக்கிக்கொண்டு ஒரு பெரியவர் யாரைச் சொல்கிறார் என்று தெரியவில்லை.

''இத்தனை வயசுக்கப்புறம் என்ன ஷோக் வேண்டியிருக்கு... மனுஷன் உட்கார்ந்திருக்கறதுகூடத் தெரியாம மேலே மணலை இறைச்சிட்டு இழைஞ்சு இழைஞ்சு போறதுகள்...''

ராமானுஜத்துக்குக் கொஞ்சம் ஆச்சரியமாய் இருந்தது. அவர் தெரிந்துதான் சொல்கிறாரா, இல்லை போய்விட்டார்கள் என்று நினைத்துச் சொல்கிறாரா?

''கொஞ்சம் இரு வேதம்...'' என்று மேலே நடந்த வேதத்தைத் தேக்கினார்.

மெதுவாய்ப் போய் உட்கார்ந்திருந்தவர் பக்கத்தில் நின்றார். அவரை இதற்கு முன்னால் எங்கேயோ பார்த்தமாதிரி தோன்றிற்று.

''அடேய்.... ராமானுஜண்டா... கொட்டாப்புளிராமானுஜம்....''

''யாரு... ஓஹோ... ஹோ.. உக்காரு... உக்காரு...'' என்றார், இட்டிய மனிதர்.

''வா... வேதம்.... நான் அடிக்கடி சொல்ல மாட்டேன்... டி.பி. பரந்தாமன், டி. பி. பரந்தாமன்னு...அவன்தான்... இது என் மனைவி...''

''நமஸ்காரம்'' என்றார்பரந்தாமன். குரல் வலுவிழந்து போயிருந்தது.

''படவா... எங்களைப் பார்த்து 'ஷோக்' பேர்வழிங்கன்னலை?''

''தெரியாமச் சொல்லிட்டேன்டா... மேலே மணல் விழுந்து கண்ணை மறைச்சுடுத்தா... அந்த எரிச்சல்...''

''பரவாயில்லை... இந்தா சுண்டல் எடுத்துக்கோ....''

''நீ சாப்பிடு...''

''எடுத்துக்கோடான்னு...'' என்று அதட்டினார் ராமானுஜம்.

''ரிடையர்ட் லைஃபா ?''
— பரந்தாமன் கேட்டார்.

''ஆமாம்... வேற என்ன? அதான் வெயில் சாயறதுக்கு முன்னாடியே பீச்சுக்கு வந்தாச்சு.... போறதுக்கு எப்படியும் எட்டுமணி ஆயிடும். உனக்கு எத்தனை பசங்கள்? எத்தனை பெண்கள்? கரையேத்திட்டயா...? எத்தனை வருஷம் இருக்கும் பார்த்து... அடையாளம் தெரிஞ்சதே பெரிசு இல்லை?''

''நாலு பையன்கள் ரெண்டு பெண்கள். மூத்தவன் சென்ட்ரல் மினிஸ்டிரியிலஇருக்கான்... பெண்டாட்டி குழந்தைகளோட டில்லி வாசம். ரெண்டாவது பையனுக்கு டாடாவில் உத்தியோகம். ஜம்ஷெட்பூர்ல. அவனுக்கு நாலு



பொண்கள். மூணாவது பையன் டாக்டர். அவன் மிஸஸூம் டாக்டர் பெங்களூர்லே. நாலாவது பையன் ஸ்டேட்ஸ்ல இருக்கான். இன்ஜினீர். அவனுக்கு நான் கல்யாணம் பண்ணி வக்கலே.''

''ஏன், இன்னும் சரியா வரன் அமையலையா?'' ராமானுஜம் கேட்டார்.

''அதில்ல...அவனே பண்ணிண்டான்.... நீலக் கண் வெள்ளைக்காரச்சி....''

''பேஷ்... பேஷ்... லவ் மாரேஜா?... பெண்கள்?''

''ஒருத்தி பாம்பே... ஒருத்தி கல்கத்தா. இப்ப நானும் இவளும்தான் மிச்சம். என் முகத்தை அவளும் அவ முகத்தை நானும் பார்த்துண்டு உக்காந்திண்டிருக்கோம். பிடிக்கலேன்னு இதோ இப்ப வந்திருக்கிற மாதிரி பீச்சுக்கு வந்துடுவேன்.''

சொல்லிவிட்டுப் பரந்தாமன் மணலைக் கைகளால் அளைந்தார். மனசில் விரக்தி ஏராளமாய் ஏறியிருந்த மாதிரி தெரிந்தது. பேச்சை மாற்றினால் உசிதம் போல் தோன்றிற்று ராமானுஜத்துக்கு.

''வீடெல்லாம் கட்டினியா? என்ன உத்யோகத்தில இருந்தே?''

''அதுக்கெல்லாம் வக்கேதுடா ராமா... அரைக்காசுசம்பளம்னாலும் அரண்மனை உத்தியோகம்னுட்டு அந்தக் காலத்தில ஸ்டேட் கவர்ன்மெண்ட்ல சேர்ந்தேன். கடன் வாங்கிப் பசங்களைப் படிக்க வைக்கிறதுக்கும், பொண்களைக் கட்டிக் கொடுக்கிறதுக்கும் சரியாயிடுத்து.... பசங்கள்ளாம் சும்மா சொல்லக்கூடாது. ஒண்ணுக்கொண்ணு சோடை போகல்லே. எல்லாம் வைரம்தான். அதுசரி, நீ என்ன உத்தியோகத்தில இருந்தே?''

''பாங்க்ல இருந்தேன். கடன் குடுத்தான் ஷெணாய் நகர்லே வீடு... நன்னா பெரிசாவே கட்டிட்டேன். இப்ப ரிடையர்டு. பிராவிடெண்ட் ஃபண்ட் லொட்டு லொசுக்கு மொத்தமா குடுத்தான். மேல் போர்ஷனை வாடகைக்கு விட்டாச்சு. வாடகை வர்றது. மாசம் ஒண்ணாந் தேதியானா வட்டிப் பணம் வந்துடறது. சாப்பிடறோம். நிம்மதியாயிருக்கோம்.''

அவன்: ''வேலை நிறுத்தத்தைத் தடை செய்து அவசரச் சட்டம் வந்திருக்காமே...?''

இவன்: ''ஆபிஸில் தூங்கறவங்களை அந்தச் சட்டம் ஒண்ணும் பாதிக்காது.... நீ வீணா நடுங்கிச்சாகாதே!''

-உ. ராஜாஜி



''குடுத்து வச்சவன் நீ!'' என்றார் பரந்தாமன். குரல் கம்மிப் போயிருந்தது.

''என்னத்தைக் குடுத்து வச்சோம்? அவளுக்கு இன்னும் கொறைதான்.''

''சொன்னாத் தப்பா நெனைச்சுக்க மாட்டியே?'' என்று இடை மறித்துக் கேட்டார் பரந்தாமன்.

''சொல்லுடா...''

''ஒரு நூறு ரூபா இருந்தாக் குடேன்... அப்புறம் தரேன்.''

''என்னது?''

''ஆமாண்டா... உங்கிட்டச் சொல்றதுக்கென்ன? வர்ற பென்ஷன் பணம் வாடகைக்கும் வயித்துக்குமே இழுபறியா இருக்கு. லக்ஷ்மிக்கு வெள்ளெழுத்து கண்ணுதெரியலே, தெரியலேன்னு சொல்றா... தண்ணியா கொட்டறதுங்கறா...சமையல்லாம்அவதான். ஏதாவது ஒண்ணு கெடக்க ஒண்ணு ஆயிடப் போறதேன்னு ஆஸ்பத்திரிக்குக் கூட்டிண்டு போனேன். டெஸ்ட் பண்ணிக் கண்ணாடிக்கு எழுதிக் கொடுத்திட்டான். நூறு ரூபாய் ஆகுமாம் கண்ணாடிக்கு. எங்கே போவேன்?''

''நாலு பசங்கன்னு சொன்னியே.''

''நாலு பசங்களான்னு கேட்டியே... அதான் நடுத்தெருவுக்கு வந்துட்டேன்போல் இருக்கு... வரட்டுமா?''

விருட்டென்று எழுந்து கொண்டார் பரந்தாமன்.

அவர் தோளைப் பிடித்து உட்கார்த்தி வைத்தார் ராமானுஜம். பர்ஸைத் திறந்து ஒற்றை நூறு ரூபாய் நோட்டை எடுத்து அவர் உள்ளங்கையில் வைத்து அழுத்தினார்.

''போ... முதல்லே ஆமடையாளுக்குக் கண்ணாடி வாங்கிப் போடு.''

''ரொம்ப தாங்க்ஸ்டா'' என்றார் பரந்தாமன் மணல் போர்த்தியிருந்த புறங்கையால் கன்னத்தைத் துடைத்து விட்டுக் கொண்டே.

''பரவாயில்லே....''

''அவசியம் ரெண்டு பேரும் வீட்டுக்கு வரணும்.''

''ஆகட்டும்.''

''வரட்டுமா... வரட்டுமா மாமி?''

விறுக் விறுக்கென்று ஒற்றைக் கையை மாத்திரம் அதிகமாய் வீசிக் கொண்டு கால்களைச் சின்னச் சின்ன எட்டாய் வைத்து வேகமாய் அவர்களிடமிருந்து விலகி நடந்தார் பரந்தாமன்.

''பாவம்....'' என்று முனகினார் ராமானுஜம். விலாசம் கொடுக்காமலே வீட்டுக்கு அழைத்தது எப்படி என்று புரியாமல் போயிற்று. ஞாபக மறதியாய் இருக்கும்....

''போகலாமா வேதம்?''

''எனக்கு இப்பத்தான் சந்தோஷமா இருக்கு'' என்றாள் வேதம்.

''என்னத்துக்குச் சந்தோஷம்?''

''நான் மலடியாய்ப் போயிட்டதில தான்!''

''அசடு...'' என்று சொல்லிவிட்டு அவள் முதுகைத் தட்டிக் கொடுத்துவிட்டு எழுந்தார் ராமானுஜம்.

சினிமா

# சினிமா

திரைஞானி

விமர்சனம்

'லொக் லொக்' என்று இருமி ரத்த வாந்தி எடுக்கும் புற்று நோயாளி வேடம் கமலுக்குப் புதுசுதான்.

''நாகேஸ்வர ராவும், 'வசந்த மாளிகை' சிவாஜி கணேசனும் நினைவுக்கு வராமல் இருந்தால் நமக்கும் புதுசுதான்.

இடைவேளைக்குப் பிறகு வரும் நோய்க்கு முன் பாதியிலேயே மருந்து தடவி விருப்பது புத்திசாலித்தனம்! காதல் மருந்து. ஸ்ரீதேவியைச் சுற்றிச் சுற்றி வரும் கமலின் காதலையும் மோதலையும் ரசித்துப் பார்க்கச் செய்துள்ளார்கள். இடைத்தரகர் மனோரமா.

என்றாலும் பின் கதையால்தான் கமலுக்கும் சரி, கதைக்கும் சரி, வலு கூடிநிற்கிறது. காதலின் ஆழத்தைக் கதையோடு பின்னிவிட்டு உருக்கத்தையும் தந்திருக்கிறார்கள்.

கமல் தனது நடிப்பில் இருமலுக்கும் வாந்திக்குமே முக்கியத்துவம் கொடுக்காமல் நோயின் பாதிப்பை முகத்தில் பிரதிபலித்துக் காட்டி விடுகிறார். பாராட்டு.

நாயகிகளுள் இரண்டு 'ஸ்ரீ'க்கள் போட்டி போடுகிறார்கள். கமலை அடைய ஒரு போட்டி, நடிப்பில் சிறக்க ஒரு போட்டி. முன்னதில் ஸ்ரீப்ரியாவும் பின்னதில் ஸ்ரீதேவியும் வெற்றி பெறுகிறார்கள்.

'டைகர்' பிரதாப் திடீரென்று வருகிறார். திடீரென்று ஊருக்குப் போகிறார்; திடீரென்று தூக்க மாத்திரை சாப்பிடுகிறார். கடைசியில் திடீரென்று ஸ்ரீதேவியைக் கைப்பிடிக்கிறார். நடிப்பு? திடீரென்று தோன்றினால்தான் உண்டு.

மகனுக்குப் புற்று நோய் என்பது பெற்றோர்களுக்கே தெரியாது எனச் சொல்லப்படுவதும், முதல் நாள் பார்த்த பெண்ணை மறு நாள் 'நீயார்' என்று கமல் கேட்பதும் கதையிலே மாயம்!



## வாழ்வே மாயம்






ஏவி.எம். பங்களாத் தோட்டத்தில் ஒரு மரத்தடியில் ஐந்தாறு வயதான கிழவிகள் அமர்ந்து அரட்டை அடித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களுள் ஒருவர் மட்டும் எனக்கு அறிமுகமானவர். அந்தக் காலச் சிரிப்பு நடிகை அங்கமுத்துதான் அவர்.

அவர் எங்கே இங்கே வந்தார்?

அவரையே கேட்டேன். காதும் சரியாகக் கேட்கவில்லை. கண் பார்வையிலும் சற்றுக் கோளாறு. உரக்கவே பேசவேண்டியிருந்தது.

''நம்ம வளர்ப்புப் பிள்ளை மோகனுக்காகப் படம் எடுக்கிறேன். அதோ பாருங்க. அங்கே நடக்குதே அது நம்ம படத்து ஷூட்டிங்தானுங்க'' என்றார்.

அவர் சுட்டிக் காட்டிய இடத்தில் ராஜேஷும், 'மாஜிக்' ராதிகாவும் நடித்துக் கொண்டிருந்தனர்.

''படத்துக்கு என்ன பெயர் வைத்திருக்கிறீர்கள்'' – கேட்டேன்.

''தண்டவாளம்'' என்று பேரு வெச்சிருக்கேன். டைரக்டர் பேரு சாமி'' என்றார்.

அதற்குள் மாஜிக் ராதிகா என்னிடம் வந்தார்.

''வருகிற மார்ச் மாதம் முதல் தேதி என்னுடைய நாடகத்தை அரங்கேற்றப் போகிறேன். நாடகத்தில் இதுவரை யாரும் புகுத்தாத அளவு மாஜிக் காட்சிகளைப் புகுத்தியிருக்கிறேன். தமிழ் நாட்டுக்கு இது புதிய முயற்சி'' என்றார்.



**பா**லாஜியின் 'தீர்ப்பு' பட செட்டில், வசனகர்த்தா ஏ. எல். நாராயணனுடன் பேசிக் கொண்டிருந்தேன். பழைய நினைவுகளை அசை போட்டுக் கொண்டிருந்தார். அந்தக் கால வசனங்களையெல்லாம் அப்படியே ஒப்பித்தார் மனுஷன். நல்ல ஞாபக சக்தி.

நான் இதுவரை 118 படங்களுக்கு வசனம் எழுதி முடித்து விட்டதாகச் சொன்னார்.

''இத்தனை படங்களுக்கு வசனம் எழுதியிருக்கிறீர்களே! உங்களுக்குப் பொன்னாடை போர்த்த வேண்டாமா?'' என்று கேட்டு ஒருவர் என்னிடம் வந்தார். 'பொன்னாடையும் வேண்டாம், பாராட்டும் வேண்டாம்' எனக் கூறிவிட்டேன்'' என்றார். அது அவருடைய தன்னடக்கத்தைக் காட்டியது.

வசன கர்த்தா எப்படி இருக்க வேண்டும் என்பதற்கு முன் உதாரணமான சில விஷயங்களை அவர் விளக்கியபோது அவருடைய அனுபவம் அதில் பளிச்சிட்டது.

''ஒரு நிமிஷத்துக்கு 90 அடி படம் ஓடுகிறது. அந்த ஒரு நிமிடக் காட்சிக்கு எத்தனை



வரிகள் எழுதினால் சரியாக இருக்கும் என்பது எனக்குத் தெரியும். யார் யாருக்கு எப்படி வசனம் எழுதினால் அது பொருத்தமாகஇருக்கும் என்பதும் தெரியும். அன்றைய காட்சியில் 9 மணிக்கு எந்த நடிகர் வருகிறார், 11 மணிக்கு யார் வருகிறார், 1 மணிக்கு யார் வருகிறார் எனத் தெரிந்து வைத்துக்

கொண்டு அவரவர்கள் வருகைக்குத் தகுந்த மாதிரி காட்சி அமைத்துக் கொடுப்பேன். வராத நடிகர்களுக்கு முதலில் எழுதிவிட்டு, வந்திருக்கும் நடிகர்களைக் காக்க வைத்து நேரத்தை விரயமாக்க மாட்டேன்'' என்றார்.

நாராயணன், தான் எல்லாப் பத்திரிகைகளையும் வாங்குவதாகவும், ஒரு வரி விடாமல் படிப்பதாகவும் சொன்னார். ''அப்படிப் படிக்கும்போது நல்ல கரு இருந்தால் அதை எடுத்துக்கொள்வேன். சமீபத்தில் ஒரு தயாரிப்பாளருக்கு ஒரு கதை கொடுத்துள்ளேன். அந்தக் கதையின் கதைக் கருவை யாரோ ஒருவர் என்னிடம் சொன்னார் என்பது மட்டும் ஞாபகம் இருக்கிறது. எந்த இடத்தில் அவரைச் சந்தித்தோம் என்பதும் ஞாபகம் இருக்கிறது. அது யார் என்பது மட்டும் நினைவில் இல்லை. ''இக்கதையின் கருவைச் சொன்னவர் நேரில் வந்து என்னிடம் உரிய சன்மானத்தைப் பெற்றுச் செல்லக் கோருகிறேன்'' என்று விளம்பரப்படுத்தவோ அல்லது படத்தின் கடைசியில் எழுதிக் காட்டவோ நினைத்துள்ளேன்'' என்றார்.

அது நாராயணனின் பெருந்தன்மையை உணர்த்தியது.





'கிசுகிசு' பொம்மை

மேனகா படப் பிடிப்புக்குச் செல்லும்பொழுது கையில் அழகான பிளாஸ்டிக் பொம்மை ஒன்றை எடுத்துச் செல்கிறார். அந்தப் பொம்மைக்கு 'சந்திரன்' என்கிற பெயரைச் சூட்டியுள்ளார். சாதாரண பொம்மை அல்லஅது. பாடும் பொம்மை. அதாவது டிரான்ஸிஸ்டர் பொம்மை.

துபாயிலிருந்து அவருடைய உறவுக்காரர் வாங்கி வந்தது. அது சரி! அந்தப் பொம்மைக்கு 'சந்திரன்' என்னும் பெயரைச் சூட்டியது ஏன்? அதில் தான் 'கிசுகிசு'வே அடங்கியிருக்கிறது!

ஊஹூம்! அதைச் சொன்னால் அவர் கோபித்துக் கொள்வார்.

படம்: ஈ.வெ.ரா. மோகன்



## இளைய தலைமுறை

'மற்றவை நேரில்' பாஸ்கர் பெங்களூரில் என்ஜினீயர் படிப்புக்குப் படித்துக்கொண்டிருந்தார். திரைப் பிரவேசம் இவரது படிப்புக்கு சுமா வைத்துள்ளது. தொடர்ந்து படிக்கலாமா வேண்டாமா என்று யோசித்துக்கொண்டிருக்கும்வேளையில் 'சிம்லா ஸ்பெஷல்', 'நலந்தானா' படங்களில் நடிக்க வாய்ப்புக் கிட்டியுள்ளதாம்.

இவரது முந்தைய படங்கள்: 'சரணம் ஐயப்பா' 'குடும்பம் ஒரு கதம்பம்' 'ஒரு வாரிசு உருவாகிறது'.

இதுவரை இவரைப் பற்றி வெளிவராத செய்தி: கதாசிரியர் மகன் இவர் என்பது தான். மலையாளத்தில் வெளிவந்த 'சென்டா' தமிழில் வெளிவந்த 'வரவேற்பு' 'பொன் மகள் வந்தாள்' ஆகிய படங்களுக்குக் கதை எழுதியிருப்பவர் இவருடைய அப்பா தான். பெயர் ராமனுதன்.

படம்: ஈ. வே. ரா. மோகன்

## இவர் ஸ்ரீப்ரியா மாதிரி

சிரித்தால் கன்னத்தில் குழி விழும் ஒரே நடிகை ஸ்ரீப்ரியா. அதே மாதிரி நடிகர்களுள் யாருக்குக் கன்னத்தில் குழி விழுகிறது?

நடிகர் திலகம் சிவாஜி கணேசனின் புதல்வரும் 'காதலர்கள்', 'நலந்தானா?' 'சங்கிலி' ஆகிய படங்களில் நடித்து வருபவருமான பிரபுதான் அவர்.

இவரது இடது கன்னத்தில் அந்த 'அதிர்ஷ்டக் குழி'யைக் காணவாம்.

படம்: ஈ. வெ. ரா. மோகன்



# வா கண்ணா வா

சிவாஜி கணேசனின் நடிப்பில் நவரசத்தையும் காட்டிவிட்டார் என்று சொல்லப்படுவதெல்லாம் சுத்தப் பொய்! நவரசங்களுக்கும் மேலான பல ரசனைகளை அவரால் நடித்துக் காட்ட முடியும் என்பதை 'வா... கண்ணா வா' படம் பார்த்தவர்கள் புரிந்துகொள்வார்கள்.

கதை சொல்லப்போனால்...

பக்கத்துப் போர்ஷனில் குடிவந்த தம்பதிகளுக்குப் பிறந்த கண்ணன் மீது தனது உயிரைப் பணயம் வைத்துப் பாசம் காட்டுகிறார் நாயுடு. அந்தக் குடும்பம் அந்தக் குழந்தையுடன் அவரை விட்டுப் பிரிய நேர்ந்தபொழுது அவர் மெழுகாக உருகிக் கரைந்து போகிறார்...

சில காட்சிகளை நினைவுகூர்ந்தால்...

'தினசரி' பத்திரிகையில் ஜெயமாலினியின் நடன விளம்பரத்தைப் பார்த்துவிட்டுக் கற்பனையில் மிதக்கிறாரே அதைவிட....

தலைமுடி வெட்டிக்கொள்ள அடம்பிடிக்கும் பேரனுக்குப் பின்னாலேயே ஓடிப் பிடித்து அவனை அமுக்கி முடிவெட்டிக்கொள்ளச் செய்கிறாரே... அதைவிட....

மேஜருக்குப் பைத்தியமோ என்று இவர் சந்தேகப்பட, அவர் இவருக்குப் பைத்தியமோ எனச் சந்தேகப்பட பாவத்தாலேயே அவரை ஒரு மாதிரிப் பார்க்கிறாரே... அதைவிட....

பேரனை விட்டுப் பிரிந்த பிறகு ஒரு நாள் வீட்டுக்கு வந்த வி. கே. ராமசாமி வாய் தவறி ''உங்க பேரன்'' என்று சொல்ல, ''பாப்பா... பாப்பா... வந்து பாரேன்... நமக்குப் பேரனும்'' என்றவாறே சிரிப்பையும் அழுகையையும் மாறி மாறி நடிப்பில் காட்டுகிறாரே... அந்த இடம்....

சோற்றை இலையில் வைத்துக் கொண்டு 'கண்ணன் சாப்பிட்டிருப்பானா' என்று மனைவியைக் கேட்டவாறே கண் கலங்க கையில் உள்ள சோற்றை நழுவ விடுகிறாரே... அந்த இடம்...

கண்ணனைத் தேடிக் காடு மேடெல்லாம் நடந்து காலில் இரத்தம் பீறிட உடல் தளர மனம் தளர, நடந்து வரும் அந்த நடையிலும் ஒரு தளர்ச்சியைக் காட்டியிருக்கிறாரே அந்த இடம்....

ஏ ஒன்!

முழு நிலவு போன்ற குங்குமப் பொட்டு, சிவாஜியின் கன்னத்தை அடிக்கடி இடித்தவாறே 'தம்பி...தம்பி' என்றழைக்கும் உரிமை, இரண்டுக்கும் சொந்தக்காரி சுஜாதா. கணவருக்குத் தெரியாமல் தவழ்ந்து போய் பேரனைத் திருட்டுத்தனமாய்ப் பார்க்கும் பாசத்தில் சிவாஜிக்குத் தோள் கொடுக்கிறார் இவர். அவரது பொட்டைப் போலவே நடிப்பும் முழு நிலவு.

ஜெய் கணேஷும் வடிவுக்கரசியும் கதைக்குத் தொட்டுக்கொள்ளும் ஊறுகாய் மாதிரி.

நாகேஷ், மேஜர் சுந்தரராஜன், வி.கே. ராமசாமி, மகேந்திரன், குள்ளமணி, ஒரு விரல் கிருஷ்ணா ராவ், மல்லிகா பஷீர் ஆகியோர் கலகலப்புக்கு.

வியட்நாம் வீடு சுந்தரத்துக்கும் சிவாஜி கணேசனுக்கும் ஒரு ராசி உண்டு. அதற்குப் பெயர்தான் வசனமோ?

விஸ்வநாதனின் இசை கதாபாத்திரங்களின் இயல்போடு ஒட்டி உறவாடுகிறது.

கண்ணன் கவரில் எழுதிய 60ல் 6ஐ மட்டும் அழித்துவிட்டு 'அந்த 6 வயதுச் சிறுவன் இல்லாத தன் வாழ்க்கை பூஜ்யம்' என்பதை நாயுடு சொல்லாமல் சொல்லும் இடத்தில் டைரக்டர் யார் என்று கேட்க பதில் டி. யோகானந்த். (ஊருக்கு ஒரு பிள்ளை படத்தை இயக்கினாரே அவரா? ஆச்சரியம்தான்!)

பார்க்க வேண்டிய படம் அல்ல: அணு அணுவாக ரசிக்க வேண்டிய படம்.



# போஸ்டர் ஜோக்!

ஒரு நாள் முழுதும் கொட்டகை நிரம்பி வழிந்த சினிமா முதல், புதிதாகத் துவக்கப்பட்ட ஓட்டல் உள்பட எங்கும் எதற்கும் போஸ்டர், போஸ்டர் தான்! இப்படி சில போஸ்டர்களைச் சம்பந்தப்பட்டவர்கள் ஒட்டிப் பார்க்கலாமே!

## தத்திங்கிணை தோம்!

நாற்பது ஆண்டுகட்டு மேல் மனைவிக்குப் பயந்து நடந்து வந்த ஏகாம்பரம், இக் கழகத்தைத் துவக்கியுள்ளார். சின்னச் சின்ன விஷயத்துக்கெல்லாம் மனைவியைக் கேட்டு நடக்காமல் - தைரியம் பெற பயிற்சி அளிக்கப்படும். லஸ் பிள்ளையார் கோயிலில் தோப்புக்கரணத்துடன் கழகம் துவங்கும்.

வெற்றிகரமான

**25வது நாள்!**

கேரள அமைச்சரவை கொண்டாடுகிறது!
இதற்கு முழு ஒத்துழைப்பு நல்கிய
சபா நாயகருக்கு எங்கள்

**நன்றி! நன்றி!**

கெ. கருணாகரன்





## புதுமைப் பட்டி மன்றம்

திருச்செந்தூர் கோயில் அறங்காவலர் ராஜினமா செய்ததற்கு யார் காரணம்?

| புரட்சித் தலைவரே! | கலைஞரே! |
|---|---|
| வாதாடுபவர்கள் | வாதாடுபவர்கள் |
| அடியார் | முரசொலிமாறன் |
| டி. ஆர். ஆர். | கில்ஜி |
| நாவலர் | பேராசிரியர் |

இணைப்புரை
இராம அரங்கண்ணல்
மாதவன்

தமிழர்களே! படையெனத் திரண்டு வருவீர்!



அநீதி கண்டு பொருமிச்
செல்லும் நெடிய பயணம்!

அஞ்சாத அஞ்சய்யா சொல்கிறார்!
ஐதராபாத்திலிருந்து டெல்லிக்கு

திரளான மக்கள் புடை சூழ
ரயிலிலேயே பயணமாகிறார்

கற்பனை: 'ஈஸ்வர் குமார்'

# பொக்கிஷம்



மகாத்மா காந்தியின் 'சுவீகார புத்திரி' என்று போற்றப்படுபவர், திருமதி அம்புஜம்மாள். காந்திஜி 'அம்புஜவல்லி' என்ற பெயரை 'அம்புஜம்' என சுருக்கி அழைக்க, அதுவே பின் 'அம்புஜம்மாள்' ஆகி விட்டது. இளம் வயதிலேயே காந்திஜியின் கொள்கைகளால் கவரப்பட்டு, அவர் வழியில் நின்று, அன்று சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டு, சிறை சென்று, இன்று, தள்ளாத வயதிலும் சமூகப் பணிகளில் ஈடுபட்டுள்ளார் அம்மையார்! ''மகாத்மா காந்தி, 'ஸ்ரீ துளசி ராமாயண'த்தை இந்தியிலிருந்து தமிழில் மொழி பெயர்த்து எழுதும்படி என்னைக் கேட்டுக் கொண்டார். அதன்படி மொழி பெயர்த்து, முதல் பகுதியான 'பாலகாண்ட'த்தை புத்தகமாய் வெளியிட்டபோது, காந்திஜி அப்புத்தகத்துக்கு 'முகவுரை' எழுதித் தந்து, என் பணியை ஊக்குவித்தார். அந்நூலை மகாத்மாவுக்கே பக்தியோடு சமர்ப்பித்தேன்'' என்கிறார் திருமதி அம்புஜம்மாள்.

பேட்டி: **எஸ். சந்திரமௌலி**

## கடிதத்தின் மொழிபெயர்ப்பு

ஸ்ரீமதி அம்புஜம்மாளுக்கும், எனக்கும் உள்ள பரிச்சயத்தை யாவரும் அறிவர். மிக்க அன்புடன் அவர் ஹிந்தி பயின்றிருக்கிறார். அவ்வளவு அன்புடனே இராமாயணமும் கற்றிருக்கிறார். இப்போது அவர் அந்த நிகரற்ற கிரந்தத்தை தமிழில் மொழி பெயர்த்திருக்கிறார். தமிழ் மக்கள் அதை அன்புடன் படிப்பார்களென்று நான் நம்புகிறேன். அம்புஜம்மாளுக்கு நான் வந்தனம் செலுத்துகிறேன்.

சேவாக்கிராமம்,
வர்தா, 7-8-40

M K Gandhi

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press Race Course Road Guindy Madras-600 032. (Phone: 431543)
Assistant Editor: P.S. Mani    Layout Artist: Nambi    Editor: K. Rajendran

**உங்கள் கேசம் அடர்த்தியின்றி சக்தியின்றி இருக்கிறதா? உங்கள் கேசத்தைப் பக்குவப்படுத்தி அழகையும் ஆரோக்கியத்தையும் அளிக்கிறது...**






**செழுமையான புரதப்போஷாக்கு நிறைந்த**

## ஹேலோ எக் ஷாம்பூ

ஊட்டம் குறைந்த நிலையில் உங்கள் கேசம் அடர்த்தியின்றியும், சக்தியின்றியும், ஆரோக்கியமின்றியும் காணப்படுகிறது.

பட்டுப்போன்ற, பொன் நிறமுள்ள வழவழப்பான ஹேலோ எக் ஷாம்பூ செழுமையான புரத ஊட்டம் நிறைந்த உத்தியின் மூலம் உங்கள் கேசத்தை சீராகப் படியவைத்து அதற்குத் தேவையான எல்லா ஊட்டங்களையும் அளிக்கிறது. உங்கள் கேசம் அழகாக ஆரோக்கியமாக, அடர்த்தியாகத் திகழ்கிறது.

ஹேலோ எக் ஷாம்பூவின் செழுமையான நுரைவளம் உங்கள் கேசத்தில் புகுந்து அதை பொலிவுடனும் தூய்மையான பளபளப்புடனும் திகழச் செய்கிறது.

**ஹேலோ எக் ஷாம்பூ...**

**அழகிய அடர்த்தியான ஆரோக்கியமான கேசத்திற்கு**

HES. G. 4. TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

# ராசி வண்ணம்

## ரிஷபம்

வெள்ளையே ரிஷபராசியின் வண்ணம்
கள்ளமில் மனதைக் காட்டிடும் திண்ணம்
கலைமகள் ஆடையும் தும்பைப்பூ வெண்ணிறம்
கலைகள் அனைத்தும் அவள் தரும் நல்வரம்
பனிபடர்ந்த இமயத்தில் பறந்திடும் துன்பம்
இனிக்கும் 'கட்டு'வின் கவிதையில் பிறந்திடும் இன்பம்!



**ஏஷியன் பெயிண்ட்ஸ்**

Adroit 5492 Tam.